பட்டாபியின் **முகநூல் இதழ்**

December 2023 FB JOURNAL VOICE OF PLURALISM



Pattabi's FB Postings of Dec 2023

# முகநூல் இதழ் டிசம்பர் 2023

Dec 2023 FB Postings

dec 31 2023

Wishing you a Healthy and Happy New Year

“It can be reasonably argued that in India , from the beginning of its civilisational enterprise, nothing has remained singular for long.

Whether God or religion, philosophy or metaphysics, language or custom, every realm is marked by plurality”

Ashok vajpeyi in his edited book

3000 years of Difference, Doubt and Argument

Happy Healthy New Year wishes

டிசம்பர் 31 2023

Now Play with FCI Card

The intention of PWA leadership and their hard work to settle the issue of pension revision for the BSNL absorbed Retirees as per 7th CPC, by all available means is appreciable one. They burn midnight oil and break their head to achieve that demand. One should recognise their sincerity of finding logic in all possible manners.

But the efforts of one should have its own rhymes and reasons to get the break through. The reasons and logic should be sound to get it done.

There is some confusion in finding methodology, though the aim and goal is 7 th CPC. Already PBCAT is there to support and the additional card is now used, namely the direction issued to Accounts people by the Ministry of Consumer Affairs on Dec 13th, 2023. So , people are happy that they have their sound supports for the 7 th CPC.

Earlier the demand was from 1-1-2017 with 119.50 IDA merger with the derived 32 percent of basic . The first two factors are not from 7 th CPC, and they are factors of 3 rd PRC. For post 2017 the earlier demand was the same methodology on their retirement date, and this was subsequently modified and the same 1-1-2017 was conceded. This needs a pay scale change.

Now after seeing the order of FCI 'food transferees- Retirees' , a letter is sent by PWA GS drawing the attention of the said DFPD of Dec 13th 2023, that is with the same multiplication factor of 7 th CPC as on 31-12-2015- meaning pension revision w.e.f 1-1-2016 with same CDR of CG pensioners.

Though the letter of GS is not directly demanding pension revision from 1-1-2016 with CDA, one may infer from the speeches of leaders that is the new focus. Even they started advocating CDR is beneficial comparing IDR.

Now because of this new focus , the issue is turned to post 2016 cases.

FCI has implemented pay revision to its non executive as well as Executives by 2019 itself as per 3 rd PRC. When contacting the FCI Employees union GS com Varghese of CITU, he told about their pension by NPS only . All the old guards gone is his understanding.

Regarding the FCI food transferees case, they got their own beautiful 12 A clauses , all statutory by the act of parliament. The special provisions for transfer of Govt employees to corporation have this 12 A 4 a b provisions in the FCI Act ( amended in 1968).

4.Every officer or other employee transferred by an order made under sub section 1 shall within six months from the date of transfer, exercise his option in writing to be governed.

a By the scale of pay applicable to the post held by him under the Govt immediately before the date of transfer or by the scale applicable to the post under corporation

b. By the leave, PF, retirement or other terminal benefits admissible to employees of the CG in accordance with the rules and orders of the CG as amended from time to time or the leave , PF or other terminal benefits admissible to the employees of the corporation under the regulations made by corporation made by under this act.

Ok good. This old guards namely food transferees are almost retired and no employee in that category was there on the said date of 1-1-2016. That is in that category, no post 2016 case is available. This one is confirmed with the activist of them- Shri Murukesan- who is handling their case and the beneficiary of that Dec 13 th 2023 order. That order speaks about pay revision also effective from 1-1-2016 and about basic pay and regulation. I do not know for whom that is placed.

The SC judgment of 10-2-2010 asking Govt to settle their - food transferees- grievance with 9 % interest rate, and the Madras HC decision of 2018 with no interest is not relevant to bsnl absorbed .

The issue is whether the DOT can take a lead for BSNL absorbed pension revision. Yes they can take it provided there is no such absorbed category on 1-1-2016. But in our case there are lakhs of pensioners belonging to post 2016/ post 2017. As absorbed employees, they cannot be treated differently one for pre 2016/ pre 2017 and another for post 2016/ post 2017.

FCI food transferees is in different position, and there is no such issue like post 2016 for them. But our case is different and pre and post are still greatly linked.

So it seems that the letter addressed to the DOT Secretary on Dec 29th 2023- quoting Dec 13th 2023 is having no relevance to bsnl absorbed as it does not feel the presence of post 2016/ 2017 section , in lakhs .

Happy and healthy New year to all.

9 am Dec 31 , 2023 R.Pattabiraman

டிசம்பர் 30 2023

Theory ஒன்றை ஆட்சிக்கு வந்த பின்னர் அப்படியே அமுல்படுத்த முடிவதில்லை என்பதுதான் வரலாறு பல இடங்களில் சொல்லித்தரும் பாடமாக இருக்கிறது.

லெனின் அக்டோபர் புரட்சி 1917க்குப் பின்னர் பொறுப்பேற்றவுடன் , மற்ற எந்த போல்ஷ்விக் தலைவர்களையும் விட, இதை நன்கு உணர்ந்தவராக இருந்தார். 1918ல் ரஷ்யாவில் நிலவிய ஏராள பிரச்சனைகளுடன், கட்சிக்குள்ளும் விவாதம் சூடாக நிலவியது. புகாரின் போன்ற இளம் கோட்பாட்டாளர்கள் இடது அதிவாத குழுவாக தங்கள் நிலைக்காகப் போராடினர். மக்களின் ஆதரவை பல கிராமங்களில் பெற்றிருந்த எல் எஸ் ஆர் என்கிற சோசலிஸ்ட் புரட்சியாளர்கள் தினசரி லெனின் அரசை விமர்சித்து போராடிக்கொண்டிருந்தனர். மென்ஷ்விக்குகளும் பெரிய அளவில் இருந்த்கனர். ஒற்றை கட்சி ஆட்சியை பலப்படுத்தவேண்டிய போராட்டத்தை போல்ஷ்விக்குகள் நடத்திக்கொண்டிருந்தனர்.

புகாரின் லெனின் புரட்சிக்கு முன்னர் எழுதிய state and revolution யை சுட்டிக்காட்டி, அரசு எப்போது உதிர்ந்து விழும் எனச் சொல்ல வேண்டும்- சோசலிசம் மற்றும் கம்யூனிசம் குறித்து சரியான வரையறைகள் வேண்டும் என கடுமையாக போராடினார்.

மார்ச் 1918ல் கூட்டப்பட்ட 7வது கட்சி காங்கிரசில் 5000 உறுப்பினருக்கு ஒரு சார்பாளர் என 46 பேர்கள் மட்டுமே அனுமதிக்கப்பட்டிருந்தனர். பிரஸ்ட் லிட்டோவெஸ்க் அமைதி ஒப்பந்தம், அய்ரோப்பிய நாடுகளில் புரட்சி போன்றவைகளும் விவாதமாயின.

புகாரின் வாயடித்தார் we the left are always right. லெனின் புகாரின் போன்ற இளம் அறிவுஜீவிகளை சற்று மென்மையாக நடத்த விரும்பினார். செல்லமாக புகாரினை புகாஷ்கா என அழைப்பாராம். ஏய் குட்டி பூச்சி என்று பொருளாம். லெனின் தனது வாதங்களை கறாராக தந்தார்.

சோசலிசம் கட்டுவது என்பது இப்போது நடைமுறை வேலை- from the area of dogma to the area of practical work- pre revolutionary speculations about post revolutionary practice were impractical. ஆகையால் சோசலிசம் என்றால் இப்படி என வரையறை

செய்யமுடியாது. அரசும் பலப்படவேண்டுமே தவிர அது உடனடியாக இற்று போய்விடாது என்கிற புரிதலை லெனின் வெளிப்படுத்தினார். லெனின் புகாரினுக்கு மேலும் தெளிவுபடுத்தினார்.

The materials for a characterisation of socialism yet to exist. The bricks with which socialism will be built have not yet been made. A program is a statement what we have begun to do and of the next steps that we want to make. We are in no position to describe socialism ( page 256/707 of Fisher)

இந்த விவாதங்களை லூயி பிஷரின் லெனின் புத்தகத்தில் அத்தியாயம் 12-14 களில் விரிவாகக் காணலாம்.

நேருவிற்கும் இப்படிப்பட்ட சிக்கல்கள் இந்தியாவில் நேர்ந்தது. மார்க்சிய நம்பிக்கை தோய்ந்த நேரு , சோசலிசம் குறித்து காந்தியுடனும் மற்றும் பலருடனும் விவாதங்களை மேற்கொண்டவர். ஜேபி லோகியா போன்றவர்கள் முதலாளிகளை வைத்துக்கொண்டு, நேரு சோசலிசம் கட்டுவாராம் பா என கிண்டலடித்தனர். நேரு என்னிடம் சோசலிசம் குறித்து கறாரான வரையறைகளை எதிர்பார்க்காதீர்கள்- வற்புறுத்தாதீர்கள் , அதை ஒரு tendency என்று புரிந்துகொள்கிறேன் என்றார். சோவியத்தின் யூடின் அவரை கேலி செய்து எழுதினார். அஜாய் கோஷ் நேருவின் hoax என்று கட்டுரைகள் எழுதினார்.

நேருவோ அதை socialistic pattern of society என்கிற ஆட்சி பொறுப்பில் வரும் practical difficulties உணர்ந்து பேசலானார்

டிசம்பர் 29, 2023

அறிந்து கொள்ள வேண்டிய பல ஆளுமைகள் குறித்து எழுதப்பட்ட தொகுப்பு பேரா ஆ இரா வேங்கடாசலபதி எழுதிய ஆஷ் அடிச்சுவட்டில் என்கிற நூல். தமிழகத்தில் பலர் படித்திருக்கக்கூடும்.

சலபதி தனது 17 ஆம் வயதிலேயே ஆய்வுக்கூடத்தில் நுழைந்தவர். நூலகப்பணி, பேராசிரியர் வாய்ப்பு, ஆய்வுலக அனுபவங்கள் வழியாக தமிழகத்தின் குறிப்பிடத்தகுந்த ஆய்வாளராக பரிணமித்து வருபவர். அவர் வ உ சி ஆய்வுகள் என்பது பலரால் அறியப்பட்ட ஒன்று.

இந்நூலில் ஆஷ் குடும்பத்தார்களை தேடிச் சென்று சந்தித்து அவர்கள் மனவுணர்வுகளை பிரதிபலித்தல், வ உ சி திலகர் உறவுகள், ஏ கே செட்டியாரின் அபார உழைப்பு, உ வே சா வின் அயரா தமிழ்ப்பணி , ரா அ பத்மநாபனின் பாரதிக்கான உழைப்பு உள்ளிட்ட பல கட்டுரைகள் மிளிர்கின்றன.

முதுபெரும் கம்யூனிஸ்ட் இயக்க தோழர் சி எஸ் என்கிற சுப்பிரமணியம் அவர்களின் தொண்டு, சலபதி என்ற இளைஞர் அவருடன் பழகிய அனுபவம் பேசப்பட்டுள்ளது.

அதேபோல் தனது உடல் நிலைக் கோளாறுகளை சற்றும் பொருட்படுத்தாது , எளிய ஆனால் முழுநேர ஆய்வுலக வாழ்க்கை வாழ்ந்து மறைந்த வீரராகவன் பற்றிய நினைவுகளும் பதிவாகியுள்ளன. சென்னை தொழிற்சங்க வரலாறு என்கிற அறிய ஆய்வை எழுதியவர் வீரராகவன்.

வாய்ப்புள்ளவர் வாசித்து பார்க்கலாம்.

டிச 29, 2023

1952ல் 60 ஆண்டுகளுக்கு முன்னர் தோழர் டாங்கே தொழிற்சங்க செயற்பாட்டாளர்களுக்கான குறிப்பு ஒன்றை எழுதினார். கம்யூனிஸ்ட் கட்சியின் மத்திய கமிட்டி முடிவையடுத்து கல்கத்தாவில் தொழிற்சங்கத்தில் பணியாற்றும் கம்யூனிஸ்ட்களுக்கான கன்வென்ஷன் கல்கத்தாவில் மே 21, 22 1952ல் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. அதில் டாங்கேவால் வைக்கப்பட்ட குறிப்புகள் பிரசுரமாக செப்டம்ர் 1952ல் வந்தது. இந்த ஆவணத்தில் Report 4 The Makeup and Tasks of our TU Functionary என்ற தலைப்பில் பிரசுரமானது..

அதிலிருந்து சில வரிகள்

While strike struggles have to be led and fought, strike leadership alone is not enough to unite and organise the working class..

Our TU functionary must pay serious attention to the application of the laws on industrial matters. There is a tendency to consider all the laws as attacks on the working class and hence requiring no attention except to combat them in a general form. But it is forgotten that there are two sets of laws. One is an achievement on our part and to demand and supervise their realsisation and application is a task of the Tus...We must build the TU movement against such laws as are against the interests of the workers..

We must learn to keep some of the cadres unexposed. Or else, the victimisation by the employees will throw all our best leaders and men from the real field of work that is factory, shop, office..

டிசம்பர் 28, 2023

அமைப்பு சார்ந்த ஒவ்வொருவர் வாழ்விலும் பிரகாசிக்கும் பொங்கும் காலமும் வெளித்தெரியாத மங்கும் காலமும் கலந்தே இருக்கும். பிரகாசிக்கும் காலத்தில் மரிப்போர் பாக்கியவான்கள் போலும். அமைப்பின் வரலாற்றில் அவர்கள் நின்று நிலைப்பர். மங்கும் காலத்தில் நேர்ந்தால் அவர் உள்புதைந்து போவர். எவராவது என்றாவது தோண்டினால் தெரிய வருவார்.

இதைத்தான் வரலாற்றில் வாழ்ந்தவர் கோடி மறைந்தவர் கோடி என்கின்றனர் போலும்...

தோழர் நமரி

டிச 28, 2023

எதிர் தரப்பை துவம்சம் செய்வதற்காக மட்டுமே தரவுகளை தேடும் ஒருவகை மனோநிலை கொண்டவர் எல்லா இடங்களிலும் இருப்பர் போலும். அது ஆரோக்கியமானதா நோய்க்கூறா?கருத்தாயுதங்களை தன் தரப்பு சேனைக்கு உற்பத்தி செய்து தரும் கருத்து பட்டறைத் தொழில்முனைவோராக அவர்கள் இருப்பர். அப்படிப்பட்ட ‘மகானுபாவர்களில்’ ஒருவர் வலதுசாரியை சார்ந்த விஞ்ஞானி ஆனந்த் ரங்கநாதன் அவர்கள். தனிப்பட்ட வகையில் அவர் மீது ஏதுமில்லை. கருத்தை வலிந்து சொல்கிற , ஒருவகைப்பட்ட arrogance and impoliteness பலரிடம் இருப்பதைப் போல இந்த இளைஞரிடம் இருப்பதைப் பார்க்க முடிகிறது.

டிவி டிபேட்களின் சத்தக்காரர்களில் அவரும் அடிக்கடி தென்படுபவர். விஞ்ஞானி . நாத்திகர் எனவும் அழைத்துக்கொள்பவர். இந்துக்களுக்கு செய்வது ‘பத்தலை ஆமாம் பத்தலை என்ன செய்திட்டிருக்கே’ என உசுப்பேத்தி விடக்கூடியவர். இந்த உசுப்பேத்தல் பேர்வழிகளால் உலகம் பின்னடைவுக்கு போன வரலாற்றைத்தான் என் சிற்றறிவு எனக்கு உணர்த்தியுள்ளது.

வலது வெறியை அறிஞர் நெறியாக வைத்துக்கொண்டு, இளைஞர் ஆனந்த் அவர்களால் பின்னப்பட்ட ‘படு உசுப்பேத்தல்தான்’ Hindus in Hindu Rashtra Eighth Class citizen and Victims of State sanctioned Apartheid. இந்நூலில், மோடி அரசாங்கத்திற்கே

‘பத்தலை மேலும் ஆடு ’ என உடுக்கை அடிக்கும் டிராமா கருத்து காட்சிகளும் இடம் பெற்றுள்ளன.

உடுக்கைகள் எந்த இசம் பேசிக்கொண்டு அடிக்கப்பட்டாலும், அவை ஒரே சவுண்டைத்தான் கிளப்புகின்றன. “ அவனை பாரு அவனால் தான் நம்ம வாழ்க்கை போச்சு அவனுக்கு என்ன அப்படி தனி சலுகை அனுமதிக்காதே உன்னை பற்றி கர்வமாக இரு” என்ற பகை முடித்து வா அறைகூவலாகவே அந்த உடுக்கைகள் பேசுகின்றன. வெறுப்பின் சவுண்டு கிளப்பல்களாகவே அவை இருக்கின்றன.

இந்த நூலுக்கு முட்டுக்கொடுக்க மூன்று வலது அறிஞர் பெருமக்கள் துணையாகியுள்ளனர். புகழ் வாய்ந்த முடிந்தவரை தரவுகளைத் தேடி, தான் விமர்சனம் செய்பவரின் நியாய உணர்வுகளை முற்றிலுமாக மறைத்துவிடாமல் எழுதிய கிரிலால் ஜெயின் மகள் , வலது வரலாற்றாசிரியராக நேரு மெமோரியல் மியுசியத்தில் பவனிவரும் மீனாட்சி ஜெயின் ‘ஆஹா ruthless exposure of monumental follies’ என அம்பலப்படுத்தல் தியரியை தூக்கிக்கொண்டு ஆனந்தை பாராட்டியுள்ளார்.

அடுத்த முட்டு சாவர்க்கர் புகழ் விக்ரம் சம்பத். இவர் ஆனந்திற்கு எழுதி சாவர்க்கர் ஆய்வில் பெற்ற பெயரை ஏன் சமரசப்படுத்திக்கொண்டார் எனத்தெரியவில்லை. அவரின் காந்திய நேரு வெறுப்பை விக்ரம் வெளிப்படுத்துகிறார்

From Gandhian Nehruvian era mala fides fantasies to the current one of intense polarisation and vote bank politics, the interests of the Hindu have always been relegated to the last priority. **என்ன** ஆய்வாளர் இவர். காங்கிரசும் காந்தியும் இந்துக்களின் பிரதிநிதி என்றுதானே நாடே பிரிந்தது. நாட்டில் இன்றுவரை நடந்த இசங்களின் மோதலில் காங்கிரஸ் குறித்த சித்திரமே அப்படித்தானே காட்டப்பட்டது.

அப்படி ஒன்றும் ஆனந்தின் புத்தகம் ஆய்வு புத்தகமும் அல்ல.

மூன்றாவது முட்டு இன்று வலதில் வளர்ந்து வரும் இண்டிக் ஆய்வாள குழாம் சார்ந்த உச்சநீதிமன்ற சாய் தீபக். இவர் சரியான கூட்டாளிதான் . தன்னிடம் உண்மையிருக்கிறது அதை Rough ஆக பேசினால்தான் எடுபடும், கைத்தட்டு

விழும் என்கிற பாணியில் பேசி வருபவர். அவர் முட்டு தருவதை இவ்வரிகள் காட்டும்

Anand has demonstrated the central thesis of his exposition that Hindus were and continue to be eighth class citizens regardless of who holds the reins of power , and tokenism without long term policy change is being used to keep the community in good humour

நீ செய்வதெல்லாம் டோக்கனிசம் தான் எங்களை ஏமாற்றாதே 'பத்தலை ' எங்கே long term policy என பூனைக்குட்டியை எடுத்து விடும் வேலை, உசுப்பேத்தல் - உடுக்கு அடித்து சாமியாட செய்தல் வேலையை பார்க்க முடிகிறது.

ஆனந்தின் புத்தகம் 8 உடுக்கடித்தலை செய்கிறது. State control of Hindu Temples லட்சக்கணக்கான கோயில்களை மீட்பது, காஷ்மீர் இந்துக்களுக்கு நியாயம் கோருதல், waqf Act 1995 கொண்டிருக்கும் மித மிஞ்சிய அதிகாரங்களை கேள்விக்கு உட்படுத்தல், கல்வி உரிமை கோளாறுகள் அதில் பாரபட்சம், வாக்கு அரசியலுக்கான இந்து அல்லாதவர்களுக்கு தனிச் சலுகை சட்டங்கள், இந்துக்களை மட்டுமே திருத்த விரும்பும் நீதிமனோபாவம், லட்சக்கணக்கான இந்துக்களை வதைத்தவர்களை கொண்டாடும் நிர்வாகம், 1991 வழிபாட்டு சட்ட கோளாறுகள் என்று மிகுந்த சர்ச்சைகளை கிளைப்பும் பிரச்சனைகளை 'நந்தவனத்தில் ஓர் ஆண்டி ' பாணியில் இந்த இளம் விஞ்ஞானி கிளப்பி விட்டுள்ளார்.

ஆய்வுலகிலும் உசுப்பேத்தல் , சவுண்டு கிளப்புதல், வெடிகளை வீசுதல், உடுக்கடிப்பு என்பது பரவினால் என்னவாகும் என கவலை வருகிறது. இல்லை , இதற்கு முன்னர் பரப்பப்பட்ட போலி ஆய்வுகளை தோலுரித்து அம்பலப்படுத்தவே இதைச் செய்கிறோம் என்பது இப்போது வலது சாரிகளின் குரலாகிவிட்டது. அடடா அம்பலப்படுத்தல்களையும் அவர்கள் சுவீகரித்து விட்டார்களா…

டிசம்பர் 27, 2023

ஆசையே துன்பத்திற்கு காரணம் என புத்தர் சொன்னதாக நமக்கு பாடம் நடத்தப்பட்டுள்ளது. இன்றும் அப்போதனையுடன் புத்தரும் வாழ்கிறார். இன்னும் வாழ்வார்.

புத்தருக்கு முன்னர் மனிதன் ஆசைப்பட்டிருக்க வேண்டும். பின்னரும் ஆசைப்பட்டுக்கொண்டுதான் இருக்கிறான். அப்படி இருக்கவும் செய்வான். எந்த ஆசை அவனை ஆட்டுவிக்குமோ, அதை அடைய அவன் ஆயிரம் வழிகளைக் கூட தேட சித்தமாகிறான். ஒரே ஆசையுடன் வாழ்நாளை கடத்திப் போனவர்களும் இருக்கலாம். சீ சீ இந்த ஆசை புளிக்கும் என அதை விட்டுவிட்டு, புதிய ஆசைக்குள் அவன் தன்னை தாழிடவும் செய்யலாம். ஆசையால் தான் உலகமே நகர்கிறது தெரியுமா என விஞ்ஞான விளக்கங்கள் வரலாம். விஞ்ஞானத்தை புதிய கடவுள் ஆக்கி தொழும் ஆசையும் கூட வரலாம். தான் செய்வதை கடவுள் ஆக்கிவிட்டால், செய்பவனே கடவுளாகி விட முடியும் என்ற நப்பாசையும் இருக்கலாம்.

ஆசைப்பட்டால் தான் அடைவாய் என வீடுகள், வெளி உலகம் காதில் சொல்லிக்கொண்டேயிருக்கிறது. பற்றிக்கொள்ளப் பார் என உலகம் துரத்திக்கொண்டேயிருக்கிறது. ஆசைப்பட்டால் ஆயிரம் வழிகள் திறக்கும் என்பது பழமொழியாகிவிடலாம்.

ஒவ்வொரு ஆசை ஆசாமியும் பழிப்புக்கு ஆளாகாமல் செல்வதுமில்லை. எல்லாவற்றையும் பார்த்து விட்டேன் அடைய வேண்டியதை அடைந்து விட்டேன் எனக்கு இனி என்ன எனப் பேட்டி கொடுப்பவரும் பேட்டி பிரைம் டைமில் ஒலி ஒளி பரப்பாகுமா என கவலையுடன் இருப்பார்.

ஒரே வேலையை செக்குமாட்டுத்தனமாக செய்த போதிலும், அன்றாடம் ஏதோ சாதிக்க பிறந்த மனதுடன் , இரவு படுக்கப் போகுமுன்னர் சாதித்த சபாஷுடன் படுக்க செல்வோரும் உண்டு.

100 வயதானாலும் செய்த அதே வேலை பத்தாது..மேலும் அதையே சிறப்பாக செய்யத் திட்டமிட ஆசை சொல்லிக்கொண்டிருக்கும். வாழ் நாள் கூடினால் மேலும் சாதிக்க முடியுமே என்ற நிராசை அவ்வப்போது கவ்வும்.

டிசம்பர் 26, 2023

The Polit Bureau of the Communist Party of India (Marxist) has issued the following statement:

The CPI(M) General Secretary Comrade Sitaram Yechury has received an invitation to attend the inauguration of the Ram temple in Ayodhya. The CPI(M) policy has been to respect religious beliefs and safeguarding the right of every individual to pursue their belief. It believes that religion is a personal choice not to be converted into an instrument for political gain. Therefore, we will not be attending the ceremony.

It is most unfortunate that the BJP and RSS have converted a religious ceremony into a State sponsored event directly involving the Prime Minister, the UP Chief Minister and other government functionaries. A fundamental principle of governance in India as reiterated by the Supreme Court is that the State in India, under the constitution should have no religious affiliation. This is being violated by the ruling regime in the organisation of the event.

dec 26

காந்தி தனது நிலைப்பாட்டில் மேலும் மேலும் உறுதியாக இருந்தார். பிரிட்டிஷ் வெளியேறட்டும். இந்தியாவில் அராஜகம் விளைந்தாலும் தன் வழியை விதியை அது தேர்ந்து எடுத்துக்கொள்ளும் என்றார்.

மே 1942ல் காந்தியை சந்தித்த ராஜாஜி இரு சக்திகளை (பிரிட்டிஷ்- ஜப்பான் ) ஒரே நேரத்தில் போராடமுடியாது என்பதை காந்தி உணர மறுப்பதாக சொன்னார். காந்தியை சந்தித்த நேரு குவிட் எனச் சொன்னால் அமெரிக்காவும், பிரிட்டன் முற்போக்கு சக்திகளும் கூட ஆதரவை நமக்கு தராமல் போகும் நிலை ஏற்படும். சீனா சியாங்காஷேக்கிற்கும் சங்கடம் நேரும் என்றார். காந்தியை ஜப்பான் ஆதரவாளர் என்ற பிரச்சாரம் தீவிரமாகிவிடும் எனவும் அவர் எச்சரித்தார்.

காந்தி தனது பதிலில் -பிரிட்டிஷ் வெளியேறவேண்டும் எனச் சொல்கிறேனே தவிர , ஜப்பான் வரவேண்டும் என ஆதரவு தரவில்லை. சுபாஷ் அரசாங்கமே அவர்கள் உதவியுடன் என்றாலும் நாம் எதிர்க்க முடியும் என தன் நிலைப்பாட்டை உணர்த்தினார்.

இந்த சூழலில் லூயி பிஷர் காந்தியுடன் ஜூன் 4-9 தினம் ஒரு மணி நேரம் உரையாடினார்.அது தனி புத்தகமாகவும் வெளிவந்துள்ளது. பல அம்சங்கள் குறித்து பிஷரின் ஏராள கேள்விகள் -காந்தியின் பதில்களாக அந்த உரையாடல் சென்றது. காங்கிரசில் காந்தியின் கருத்தில் முக்கியத் தலைவர்கள்

மாறுபட்டுள்ளனர் என்பதை பிஷர் அறிவார். அவரின் ஒரு கேள்வி இவ்வாறு அமைந்தது.

Had Gandhi any organisation with which he carry on the struggle?

காந்தியின் பதில் இவ்வாறு அமைந்தது

Gandhi said the congress was his organisation . But if it failed him, he had his own organisation- himself. He was a man possessed by an idea. If such a man could not get an organisation, he himself became an organization

டிசம்பர் 26, 2023

இவர்கள் எதிராகத்தான் எழுதுவார்கள்..அமெரிக்க ஆய்வாளர்கள் ஆயிற்றே என சில ஆண்டுகளாக படிக்காமல் தள்ளிப்போடப்பட்ட புத்தகம் 60 ஆண்டுகளுக்கு முன்னர் எழுதப்பட்ட Communism in India. எழுதிய ஆய்வாளர்கள் Gene D Overstreet and Marshall Windmiller. இன்றைக்கு டிசம்பர் 26, 2021ல் என் மனத்தடையை தூக்கி வைத்துவிட்டு இந்த நூலை படிக்கத்துவங்கினேன். 600க்கு மேற்பட்ட பக்கங்கள் என்பதால் சில நாட்கள் பிடிக்கும். என் மனக்குரங்கு முழுமையாக அதை படிக்கவிட்டால் மகிழ்ச்சி. புத்தகம் பாரபட்சமின்றி பேசியிருக்கிறதா என்பதை எனக்கு முன்னர் படித்த பல பெரியவர்கள் சொல்லியிருக்கவேண்டும். எந்த விமர்சனத்தையும் இதுவரை நான் அறியவில்லை. அமேசான் இந்த புத்தகத்தை தற்போது ரூ 4500 என்கிறது. வாங்கி வாசிப்பது சற்றுக் கடினம்தான். ஆனால் மின் புத்தகம் இருக்கிறதே..வாசிக்க காலம் அருளட்டும்...

டிசம்பர் 25, 2023 பென்சன்

This piece is not to discourage any pensioner of BSNL, but to boost their consciousness by not allowing be fooled by the 'saviours' of pension revision.

Some questions need to be allowed for that.

What is the relation of the date 1-1-2017 w.r.t cpc?

What is the relation of merger points 119.50 w.r.t CPC?

These are part of the recommendations of 3 rd PRC which cannot be applicable straight , but can be incorporated by a cabinet note specially prepared for pension revision. (There is no such rule in 37 A for pension revision, the sub rules are speaking about pension fixation and distribution).This type of incorporation they did in 2007 quoting 2nd PRC implementation for the employees and thereby avoiding different yardstick for pre and post 2007 pensioners.

Now in the absence of pay revision, DOT tried to find some solution thro its presentation on Oct 17 th 2022. Nil fitment was the major issue and for some associations pressing the demand of 7 th CPC is the issue. They got PBCAT judgment, directing DOT pension revision as per the rules analogous to CPC.

There is no rule for CG pensioners for pension revision and they got their revision from 1-1-2016 along with CG Employees thro Govt order/ memo. This situation of revision for both employees and pensioners in the CG is not analogous in the case of BSNL . Employees are still struggling like pensioners for their pay revision. There is no connection for post 2017 psu employees regarding 32 % , the one derived from CPC fitment calculations. They need 3 rd PRC scales and fitment only. So how the directive of PBCAT gives analogous position of CPC to an employee of PSU.

Associations should not become a captive bird, though they show golden cage, of some individuals with dogmatic narrow visions. My way or high way will spoil any organisation, unless the members understand the false propaganda in the name of CPC.

Unless we understand the link between the post and pre 2017, it is difficult to discern things in a fair way. If pension revision is done in some mechanism to pre 2017 pensioners, the same mechanism is made applicable to post 2017 pensioners also, but done only by pay fixation route to the employees on 1-1-2017 date. If pay fixation means then we need some pay scales also. The only available pay scale route is 3 rd PRC scales for Executives and bilateral settlement for NE. Suppressing this facts is unfair in any organisation.

Kindly help me to learn thro healthy arguments. One may ignore the facts, but facts never fail to speak.

11 . 40 hrs Dec 25 th 2023 R Pattabiraman

டிசம்பர் 25, 2023

Quit India தீர்மான ஆகஸ்ட் 1942 நெருங்கும் நாட்களில், காங்கிரஸ்க்குள் பல தரப்பட்ட விவாதங்கள் நடந்தன. காந்தி, நேரு, படேல், பிரசாத், ராஜாஜி, ஆசாத், பந்த், ஆசப் அலி என எவரும் எவர் கருத்தையும் முழுமையாக ஏற்காமல் விவாதம் சென்று கொண்டிருந்தது.

பிரிட்டிஷ் ஆட்சியாளர்கள் லண்டனில் அமேரி, இந்தியாவில் லின்லித்கோ, பம்பாய் கவர்னர் லும்லி எனப் பலரும் காங்கிரசை பலவீனப்படுத்த, உள்ளூர் சக்திகள் அனைத்தையும் உற்சாகப்படுத்திக்கொண்டிருந்தனர். Definite allies to Govt during this war situation என்பதற்கான வாய்ப்புகளை அவர்கள் தேடி வந்தனர். லீக், இந்து மகாசபா, DC representatives, கம்யூனிஸ்ட்கள், ராய், ராஜாஜி போன்றவர்கள் என அனைவரையும் பிரிட்டிஷ் மோப்பம் பிடித்து வந்தது.

லீகின் ஜின்னா நிலைமைகளை சாதகமாக எடுத்துக்கொண்டு அதீத கோரிக்கைகளை எழுப்பி வந்தார். வைஸ்ராய் கவுன்சிலில் காங்கிரஸ் வராவிட்டால் விட்டுவிட்டு, லீகிற்கு குறைந்தது 8 உறுப்பினர்கள், டிப்ரெஸ்ட் கிளாஸ், சீக்கிய உறுப்பினர் ஜின்னா ஒப்புதலுடன் என்கிற அளவிற்கு பேசினார். இந்து மகாசபா 2 உறுப்பினர் அளவிற்கு ஆட்சேபணை இல்லை என்பது ஜின்னா நிலைப்பாடாக இருந்தது. Preposterous என்கிற கோபம் பிரிட்டிஷ் வட்டாரத்திற்கே ஏற்பட்டது.

ராஜாஜி தன்வழி தனி என வேறுபட்டு நிற்கலானார். கம்யூனிஸ்ட்கள் சோவியத் மீதான ஹிட்லர் தாக்குதலுக்கு பின்னர் மக்கள் யுத்தம் என்ற நிலைப்பாட்டை எடுத்தனர். சிறையில் அவதிப்படும் தோழர்களை விடுவிக்க ஜோஷி அதிகாரி போன்றவர்கள் முயற்சிகள் எடுத்தனர். பிரிட்டிஷ் நிலைப்பாட்டில் மாற்றம் ஏற்பட்டு, கம்யூனிஸ்ட் தடை நீக்கமும், தோழர்கள் விடுதலை செய்யப்படுதலும் நடக்கலாயின. டாக்டர் சுப்பராயன் மகனான மோகன் குமாரமங்கலம் விடுதலை செய்யப்பட்டார்.

கம்யூனிஸ்ட்களுடன் உறவு குறித்து பம்பாய் கவர்னர் தனது சந்தேகத்தை எழுப்பாமல் இல்லை. எழுப்பினார். முதலாளிகள் பயமடைவார்களே என்ற எண்ணம் அவரிடம் இருந்தது.

Lumley expressed the view that while release of communists might become unavoidable there was danger in their becoming definite allies of the Govt. There would be consternation among employers and capitalists and while communists said they would avoid strikes, they might well ask for large increases in wages…in short communist support was likely to raise many imponderable issues.

அமேரியும் ஜூன் 1942ல் கம்யூனிஸ்ட் கட்சிக்கு இருந்த தடையை நீக்குவது என்ற முடிவை வைஸ்ராய்க்கு தெரியப்படுத்தினார். அவர் ஜூலை 7 ல் கொடுத்த தந்தியில் எம் என் ராயை ஊக்கப்படுத்த அறிவுறுத்தியிருந்தார். அதில் முழு நம்பிக்கையை அவர் வெளிப்படுத்தவில்லை.

I believe there may be much to be said for giving much more open encouragement to Roy and every kind of left wing, communists, students, peasants and TUs that declares anti fascist…it may be that the elements we encourage now may not be reliable in the future, but they may be influenced in a better direction in the sunshine of official favour

கிரிப்ஸ்க்கு ராய் பற்றி சந்தேகம் இருந்தது. அவரை நம்பத்தகுந்த மனிதர் அல்லர் என்றே கிரிப்ஸ் கருதினார். An unreliable and self seeking politician என்ற விமர்சனத்தை கிரிப்ஸ் வைத்தார்.

அமேரியும் லின்லித்கோவும் ராஜாஜி பற்றியும் இந்த காலத்தில் பேசிக்கொண்டனர். மே 12 ல் அமேரி சொல்லும்போது ராஜாஜிக்கு மெஜாரிட்டி இருக்கா இல்லையா எனப்பார்க்காமல், மதராஸ் மாகாணத்தில் அவரை பொறுப்பேற்க செய்வீர் என்றார். Rajagopalachari has shown great courage, speaking out boldly on the right lines என அமேரி வெளிப்படுத்தினார். எதார்த்த நிலையறிந்த லின்லித்கோ, இல்லை ராஜாஜிக்கு போதுமான ஆதரவு இல்லை என்றார்- he would be much good unless he brought in some public support, CR appeared to be markedly short .

1942 Aug quit India தீர்மானம் வருவதற்கு முன்பாகவே தன் plateல் எவர் எவர் என்பதை பிரிட்டிஷ் அதிகார வர்க்கம் கணித்து விட்டது போலும்..

-Inputs vol 8 Shushila ch the crisis deepens

டிசம்பர் 25, 2023

அனன்யா வாஜ்பேய் எழுதிய Righteous Republic மனதை ரம்மியமாக அழைத்துச்செல்லும் உரையாடல் நிறைந்த புத்தகம். Self sovereigntyக்குமான உறவை அற்புதமாக நகர்த்தும் உரையாடல்.

இந்தியாவிற்கான மரபு ஏதாவது இருக்கிறதா ? மேற்கிற்கு மரபு என கிரேக்க ரோம் குறித்து துவங்குவது போல் இதை எங்கிருந்து.. 5 ஆளுமைகளின் சில முக்கிய எழுத்துக்களிலிருந்து இந்தியா எப்படி தன்னை அறம் சார்ந்த விழுமியங்களுடன் தகவமைத்துக்கொள்ள போராடி வருகிறது என்கிற உரையாடலை அழகாக நகர்த்தும் புத்தகமிது. காந்தி, நேரு, தாகூர், அம்பேத்கர் இவர்களுடன் தாகூரின் உறவினரான பெரும் ஓவியர் அபநிந்தரநாத்தையும் முன்வைத்து இந்த உரையாடல்களை அனன்யா கட்டியுள்ளார்.

அவசரமின்றி நிதானமாக படிக்கும்போது ஏராள கேள்விகளும் திறப்புகளும் அவரவர் வாசிப்பு அனுபவத்தில் உருவாகலாம். இந்தியாவிற்கான மரபு எது எனத்தேடிச் செல்லும்போது, அந்த மரபு விடுதலைப்போராட்டக்காலத்தில் எப்படிப்பட்ட மறுகட்டுமானமாக எழுந்திட முயற்சி மேற்கொள்ளப்பட்டது என்பதையும் இந்த புத்தகம் தர முயற்சிக்கிறது. கீழ்கண்ட பாரா இதை உணர்த்தலாம்.

The tradition, of moral and political reflection broadly construed, has, in effect, been reconstituted. It is a remarkable new tradition that India produces because while India is in the process of becoming a modern democracy, her founders reject the violence of the nation state form ( Gandhi), reject nationalism as an ideology ( Tagore) , transforming a non modern and sectarian history into an enabling precursor for secular democratic modernity ( Nehru), and shift the bases of human happiness from the pursuit of individual interest to the alleviation of social suffering ( Ambedkar)

இன்னொரு பாரா அவர்கள் நோக்கமும் வேலையும் என்னவாக எதை நோக்கி இருந்தன எனக்காட்டும்.

It should be clarified that the founders were not nostalgic revivalists. They did not waste time extolling the glories and virtues of the religion, culture, or philosophy of pre modern India, because their concern was with the present and the future, not with the past as such

அனன்யா சொல்கிறார் தான் சொல்லும் கதை எப்படி இந்தியா தன் சுயத்தை இந்த founders தணியா தாகத்தால் பார்த்துக்கொள்ள விழைந்தது..அதாவது find her way back to self recognition, self possession, self mastery and self realisation..

சிந்தனைக்கு மிக இதமான நம்மை மிக நிதானப்படுத்தி அழைத்துச் செல்லும் புத்தகமாக எனக்கு தோன்றுகிறது. தமிழில் வந்துள்ளதா தெரியவில்லை..

டிசம்பர் 24, 2023

1942 மார்ச்சில் கிரிப்ஸ் குழு வந்து தனது விவாதங்களை பல்வேறு தரப்பினர்களுடன் நடத்தினர். சுசிலா தனது மகாத்மா வால்யூம் 8ல் விரிவாக எழுதியுள்ளார்.

இந்த காலத்தில் நேரு குறித்தும், அம்பேத்கர் குறித்தும் செய்திகள் தரப்பட்டுள்ளன. அம்பேத்கர் பற்றிய செய்தி மகாதேவ் தேசாய் டைரியிலிருந்து தரப்பட்டுள்ளது.

முதலில் நேரு குறித்த செய்தியை பார்ப்போம். இரண்டாம் உலகப்போர் துவங்கியதிலிருந்தே, காங்கிரஸ் கூடும் போதெல்லாம் கடுமையான விவாதங்கள் நடந்தன. குறிப்பாக நேரு, ராஜாஜி, பிரசாத், ஆசாத், கிருபளானி, காந்தி மத்தியில் இந்த விவாதங்கள் சூடாக நடந்தன. இப்படியான தருணம் ஒன்றில், 1942 ஏப்ரலில், நேரு கொரில்லா போர்முறை என பேசலானார். காந்திக்கு நிச்சயமாக இது அதிர்வை தந்திருக்கும். நேரு , ராஜாஜி, ஆசாத் போன்றவர்களுக்கு அகிம்சை என்பது விடுதலைப் போராட்டத்திற்கான முறை, அவ்வளவுதான் , அதை சர்வதேச யுத்தம்- இராணுவத்தின் தேவை என்பதெற்கெல்லாம் நீட்டிக்க முடியாது என்ற கருத்து இருந்தது. ஆனால் விடுதலைப் போருக்கான வழி அகிம்சை முறை என்பதில் காந்தியுடன் நின்றனர்.

கொரில்லா போர் என நேரு பேசியதும் காந்தி 13-4- 1942ல் படேலுக்கு எழுதினார்

Jawaharlal now seems to have completely abandoned ahimsa. You should go on doing what you can. Restrain the people if you can.

நேருவிற்கு ஏப்ரல் 15 அன்று காந்தி கடிதம் எழுதினார். அதில்

Whereas we have always had differences of opinion it appears to me now that now we also differ in practice…The more I think of it the more I feel that you are making a mistake. I see no good in American troops entering India and in our restoring to gurilla warfare.

இந்த விவாதத்தின் போது ஒருவர் - எவர் என சுசிலா பெயரை எழுதவில்லை- சரி காந்தி , இப்போதும் நேரு தான் legal heir ஆ என குறும்பான கேள்வி எழுப்புகிறார். அதற்கு காந்தி சொன்ன பதிலை சுசிலா தருகிறார்.

Gandhiji said that he had never described Nehru as his legal heir. But he was virtually his heir. He had the drive that no one else had in the same measure. He was sorry that Jawaharlal had developed a fancy for guerilla warfare, but he was sure it would be a nine days' wonder. It would have no effect.

அம்பேத்கர் குறித்த செய்தி பம்பாய் கவர்னருக்கும், வைஸ்ராய்க்கும் இடையிலான கடித உரையாடல் செய்தியாக சுசிலா தந்துள்ளார்.

முன்னதாக கிரிப்சை டாக்டர் அம்பேத்கரும் , திரு எம் சி ராஜாவும் மார்ச் 30 1942ல் சந்தித்து தங்கள் கருத்துக்களை எதிர்பார்ப்புகளை முன்வைக்கின்றனர். ஏப்ரல் 1 அன்று மெமோரண்டம் தருகின்றனர். அவர்களது எதிர்பார்ப்பாக the Depressed classes would be treated as a racial and religious minority and their rights should be protected by a treaty. சந்திப்பில் உறுதிமொழியாக பெற்றது என சுசிலா எழுதியிருப்பது

Some of their representatives, might also be included in the Viceroy's Executive council.

இதன் பின்னர் ஏப்ரல் 24, 1942ல் பம்பாய் கவர்னர் ரோஜர் லும்லி

வைஸ்ராய்க்கு கடிதம் ஒன்றை எழுதுகிறார். அதில்

Ambedkar felt bitterly disillusioned and humiliated by draft declaration, that he felt disgruntled, and the disgruntlement had been noticeable in him ever since he had not been taken in the Expansion of Executive council. Ambedkar had for some time been worried by his financial position- he owed money to certain people- and gave the impression of a man who was no longer really interested in the work he was doing for his own followers. Lumley hoped that if a further expansion of the EC was possible, Ambedkar would be included

அப்போது லின்லித்கோ வைஸ்ராயாக இருந்தார். அவர் கவர்னர் லும்லிக்கு நம்பிக்கையான வார்த்தையை தந்தார். அவர் பதில் எந்த தினத்தில் எழுதினார் அல்லது பேசினார் என்பதை சுசிலா பதிவு செய்யவில்லை. வைஸ்ராய் பதிலின் சாரமாக இப்படி எழுதியுள்ளார் சுசிலா.

Linlithgow told Lumley that he had Ambedkar very much in mind and hoped it would be possible to do something for him- " he has behaved very well so far as I am concerned "

மேற்கண்ட செய்திகள் வால்யூம் 8 ல் பக் 226-43 ல் கிடைக்கின்றன.

வைஸ்ராய் ஜூலை 2, 1942ல் அமைத்த கவுன்சிலில், அம்பேத்கர் இடம் பெறுவதற்கு வாய்ப்பு கொடுக்கப்பட்டது.

dec 24

ஒரு மனிதன் சொல்லுவது உண்மையல்ல என்பதை நிச்சயமாகத் தெரிந்துகொள்ளுவதற்கு இடமிருந்தாலொழிய, அவன் சொல்லுவதை நம்பத்தான் வேண்டும். உலகத்தில் வேலைகளைக் கவனிப்பதற்கு இதுதான் அனுபவ சாத்தியமானதும், மிகவும் கண்ணியமானதுமான வழியாகும்

- மகாத்மா காந்தி

டிசம்பர் 23, 2023

Thus Spoke Com M N Roy

We all talk about freedom, but we are very reluctant to allow each other to have freedom

As soon as, for one reason or another, the proposition is made that a nation should be organised into one party, with one programme, under one leader, we must say goodbye to democracy.

A political system which will allow the suppression of the 49 % at the behest of 51% cannot be a democratic system.

If we stick to the idea of 'One Party, One Programme, One Leader' we cannot have any other freedom than that

dec 22

When Darius I , the Persian king, conquered Sindh in 516 BCE, the Indus basin was named Hindus. The name was passed on to Greeks and the word Indus thus found its place in Herodotus ( the first historian) writings. From it our land became Indoi , India, L'inde and so on for the people of the west. But for the people of Asia it became Hindustan from the Persian use of Hindu. The traditional religion of this land was given a name Hindu by the foreigners. Page 140

Among all the religions, Hinduism has changed the most, as it had no formal structure. It could not have, for it is a confederation of many faiths, and it never rejected any faith provided the believers abided by the law of Dharma. Page 140

It was told there were more than 1000 towns in Indian valley civilisation..at least 20 lakh people lived in those towns. In the entire world 2 crore people lived. The Rig Veda did not mention of any migration or any such war except one between the people of India and invaders from the west. Page 7

The Rig Veda was written in the Sanskrit used by the people of North west of undivided India. It was also close to Iranian language as far as its words, syntax and pronunciation was concerned. The scanty use of vowels as in Rig Vedic time is still predominant in punjabi language..the name Sanskrit itself tells us that it is a reformed version of some other languages. Page 69

The name of Bharatavarsha is mentioned in Vishnu purana which was in existence from 3000 years ago..what is important about the concept of Bharatvarsha is its relation with the quest of truth that gave Indian civilisation a unique identity. Page 107

The domination of Brahminical ritualism probably started about 3000 years ago…with the rise of temple culture, worshiping the idols, and the caste system replacing the varna, the Indian way of life started being smudged..taking advantage of the situation, the Brahmins firmly established their monopoly over the religiosity of the man..what we describe as Brahminism has nothing to do with the scholarly Brahmins who composed the Upanishads. Page 111-12

After Kalinga, Ashoka was overwhelmed by remorse..After annexation of Kalinga, he turned into the ideal monarch of Bharatvarsha..Ashoka in fact symbolised the traditional Bharat as he emphasised on both materialist and spiritual endeavours. Bharat turned into Buddhist state..it is said that 5 to 6 crores people lived in Ashoka' s empire, making it most populous empire of the ancient world. Page 124

Untold story of Indian civilisation by Diptendra Raychaudhuri woodpecker 2020

டிசம்பர் 22, 2023

அண்ணாவின் எண்ணித்துணிக கருமம் சொல்லித்தரும் அமைப்புப் பாடம்

“ பலகாலமாக கூறி வந்ததை மீண்டும் கூறுகிறேன். நான் பத்து, பதினொன்று ( கழகத்தில்) ஆவதை விரும்புவன். பத்து, எட்டாக ஆக்கப்படுவதை விரும்புவன் அல்ல. இது எனது சொந்த விருப்பு வெறுப்பு பிரச்சனையல்ல. கழகம் வளர இது முறை என்று நம்புகிறேன். கழகத்தை நடத்திச் செல்லும் பொறுப்பு என்னிடம் ஒப்படைக்கப்பட்டுள்ள வரையில் இந்த முறை இருக்கும்.”

“ சிறைபுகும் உயர் ஜாதி, சிறை புகாத மட்ட ஜாதி என்ற நிலை கழகத்தில் ஏற்பட்டுவிடக்கூடாது. ஒரு குறிப்பிட்ட கட்டத்தின்போது சிறை செல்ல இயலாதவராக ஒருவர் இருப்பதை நிரந்தர பலகீனமன்றோ, மாறவே முடியாத இயல்பு என்றோ எண்ணிக்கொண்டு அவரால் கிடைக்கக்கூடிய வேறு பல துணைகளை, பயன்களை, இழந்திடும் முறையில் , அவரை விரட்டுவது, யூகம் ஆகாது; நியாயமும் அல்ல”

“ திமுக தடைச்சட்டம்( பிரிவினை பேசினால்) காரணமாக அழிக்கப்பட்டு போனால், அதன் அளவுக்கு காங்கிரஸ் எதேச்சதிகாரத்தை எதிர்த்து நிற்கும் வேறு ஒரு கட்சி இன்று இல்லை. இன்னும் இருபது ஆண்டுகளுக்கு ஏற்படவும் முடியாது..சென்ற தேர்தலில் காங்கிரஸ் ஆளும் கட்சிக்கு 50 லட்சம் வாக்குகள் (200 தொகுதிகள் மூலம்), கழகத்திற்கு 34 லட்சம் வாக்குகள்( 140 தொகுதிகள்) . இந்த அளவு வாக்குகள் பெறத்தக்க கட்சிகள் எதுவும் இல்லை. ..கம்யூனிஸ்ட் கட்சி சீனப் பிரச்சனை காரணமாக மக்கள் ஆதரவை பெறமுடியா நிலையை தேடிக்கொண்டுவிட்டது. வாய்ப்பு சுதந்திரா கட்சிக்கு என்றாகிறது. இது பாட்டாளி நடுத்தர வகுப்பினருக்கு நலன் தராது. தென்னாட்டு உரிமைக்கு பலனும் தராது.”

“ தடையை மீறுவதால், கொள்கை வளர வழி கிடைக்கப் போவதில்லை. . மீறுகிறவர்களின் பேரும் புகழும் வளரும். மீறுகின்றவர்களின் இதயத்தில் பெருமிதம் , வரலாற்றில் பொறிக்கப்படத்தக்க வீரச்செயலில் ஈடுபட்டோம் என்ற திருப்தி ஏற்படும்..கொள்கை வளர்ச்சி தொடர்ந்து நடத்தப்படுகிற பிரச்சாரத்தால் மட்டுமே ஏற்படும். தடைச்சட்டம் மீறுவது வீரச்செயல், தியாகத்துக்கான வாய்ப்பு

என்று ஆகுமே தவிர கொள்கை வளர்ச்சி ஆகாது. தடை மீறுவதன் மூலம் கொள்கை தானே வளரும் என எண்ணுவது தவறு"

" என் பிணத்தின் மீது நின்றுகொண்டுதான் பாகிஸ்தான் பிரிக்கப்பட முடியும் என பேசியவர்களை நான் அறிவேன்.

பெரியாரின் பொதுவுடைமை பிரச்சாரம் என்ன ஆயிற்று என்பதும், அக்ரகாரத்தைக் கொளுத்த தீவட்டியை பெட் ரோல் டின்னுடன் வைத்திருக்கச் சொன்னது என்ன ஆயிற்று என்பதும் எனக்குத் தெரியும்..தூற்றுதலுக்காக நான் துளியும் அஞ்சவில்லை. அஞ்சப்போவதும் இல்லை….கொள்கையை விட்டுவிடவும் கூடாது. அதேபோது நாம் கட்டி வளர்த்துள்ள கழகம் அழிந்து போகவும் விடக்கூடாது என்று எண்ணுகிறேன்"

" கொள்கையை காத்திட கழகம் அழிந்துபடட்டும் என்று கூறுவதும் சரி, கழகம் காத்திட கொள்கை அழியட்டும் என்று சொல்லுவதும் வேதனைத்தரகூடியது…பரிகாரம் தேடும்போது, பிரச்சனையின் சகல கோணங்களையும் கவனிக்க வேண்டும். நமது விருப்பு வெறுப்பு மட்டும், நமது அளவுகோலாகி விடக்கூடாது"

" எந்த கட்சிக்கும் அதன் மூலாதாரம் கொள்கையை அழிக்கக்கூடிய சட்டத்தை சந்திக்க வேண்டிய நிலை ஏற்பட்டதில்லை..எனக்கு , சட்டத்தால் அழிக்கமுடியாத பாதுகாப்புடன் பாசறை வேண்டும்…

ஒன்று தெளிவாக திட்டவட்டமாக கூறிவிடுகிறேன். எவருடைய தீவிரத்திற்கும் மட்டமானதாக என்னுடையது இருக்காது. என்னுடைய தீவிரம் திட்டமிடப்பட்டதாக, நீண்டநாள் நிலைத்திருக்கத் தக்கதாக, கோலிடும் பலனைப் பெற்றுத்தர தக்கதாக இருக்கவேண்டும் என்பதிலேயே நான் மிகுந்த கவலை கொண்டவன். என் முறை இதுவரை உங்களை தலைகுனிய வைத்ததில்லை. இனியும் அந்த நிலை ஏற்படாது. கழகம் நிலைத்திடவும், கொள்கை உலவிடமும், போர் நடந்திடவும் ஏற்ற சூழ்நிலை உருவாக்கும் பணியில் என்னுடன் ஒத்துழைக்கும்படி கேட்டுக்கொள்கிறேன்."

“ பிரிவினை பேசாதே என்று சட்டம் கட்டளையிட்டது. மூச்சு பேச்சு இல்லை. பிரிவினை பேச்சே இல்லை என்ற அவச்சொல்லும் ஏற்படாமல், ஒரு நிலை ஏற்பட, வழிகாண வேண்டும்…எண்ணித் துணிக கருமம்..”

டிசம்பர் 20, 2023

A L Basham என்றாலே அவரின் வரலாற்று புத்தகமான The Wonder That was India நினைவிற்கு வரும். அவர் இறப்பதற்கு முன் ஆற்றிய 5 உரைகள் அவர் மறைவிற்கு பின்னர் தொகுக்கப்பட்டு The Origins and Development of Classical Hinduism என 1989 ல் வெளிவந்தது. அதன் இந்திய பதிப்பு 2016 ல் வந்துள்ளது.

ரிக்வேத தத்துவம், பலி கலாச்சார மதம், உபநிடதம், இறையியல், பகவத்கீதை தொகுப்பு என பல்வேறு தலைப்புகளில் இந்த உரைகள் 1984- 85ல் தரப்பட்டன.

பாஷம் லண்டனில் எஸ்ஸெக்ஸ் எனும் பகுதியில் மே 24, 1914ல் பிறந்தவர். தந்தை ஆர்தர் பாஷம் சிம்லா கௌசாலியில் இந்திய இராணுவத்தில் பணிபுரிந்தவர். பத்திரிகையாளரும் கூட. தாயார் மரியா பாஷம் பத்திரிகை துறை சார்ந்தவரே. பாஷம் தனது தந்தை மூலம் ஹிந்துஸ்தானி கற்றார். தாயார் மூலம் இலக்கியம், சமயம் குறித்த ஆர்வம் ஏற்பட்டது.

பாஷம் பியானோ கலைஞரும் கூட. கவிஞரும்.. லண்டன் ஓரியண்டல் ஸ்கூலில் அவர் இந்தோ ஆர்யர் என்பதில் பட்டம் பெற்றார். 1951ல் அவரது டாக்டர் பட்ட ஆய்வில்தான் ஆஜீவகம் நூலாக உருப்பெற்றது. இன்றளவும் ஆஜீவக ஆய்வாளர்களுக்கு குறிப்புதவி ஆக்கமாக பார்க்கப்படுகிறது.

1957ல் தெற்காசிய துறை பேராசிரியராக பாஷம் அமர்த்தப்பட்டார். இந்தியாவின் பல்வேறு பல்கலைகளில் அவர் கௌரவிக்கப்பட்டுள்ளார். அறிவு சமுத்திரம் என்ற கௌரவம் கூட அவருக்கு கொடுக்கப்பட்டுள்ளதை அறிகிறோம். கல்கத்தா விவேகானந்தர் ஓரியண்டல் ஆய்வு மய்யத்தில் அவர் பேராசிரியராக இருந்தார். கல்கத்தாவில் ஜனவரி 27, 1986ல் அவர் உடல்நலம் பாதித்து மறைந்தார்.

Classical Hinduism புத்தகத்தில் சிந்து நாகரீகத்திலிருந்து ஆரம்பித்து ஒன்றைச் சொல்கிறார் பாஷம். அங்கு பொது வழிபாட்டுத்தலம் என்கிற கோயில் ஏதும் தடயமாகவில்லை. கிறிஸ்துவர்கள், யூதர்கள், இஸ்லாமியர் போல வழிபாட்டுத்தலத்திற்கு சென்று வழிபடும் முறை பின்னால் இந்துக்களிடம் வந்திருக்கலாம் ஆனாலும் கோயில் செல்வது கட்டாயம் ஒன்றல்ல என்கிற தன்மை இருப்பதை அவர் சுட்டிக்காட்டுகிறார்.

An enigmatic feature of the ancient cities of the Indus is that nowhere in them is found a building that can be confidently identified as a temple, though there are two large halls that may have served this purpose.

Jews, Christians, Muslims if  pious attend their places of worship..on the other hand, it is possible to be a very devout  Hindu without ever going near the temple, which is late development in Hinduism and is still not one of its essential features

Untold Story of Indian Civilisation என்ற புத்தகம் 2020 ல் வந்துள்ளது. அதை திப்தேந்திர ராய்சௌத்ரி என்கிற இந்திய பழமை குறித்து ஆய்வு செய்யும் பத்திரிகையாளர் எழுதியுள்ளார். அவர் சிந்து சரஸ்வதி நகர நாகரீகம் என விவரிப்பார். ஆர்ய திராவிட என வாசிப்பவரை சிக்கவிடாமல் OAA RVC என்கிற குறீயிடுகளால் Our Ancient Ancestors Rig Vedic community என இந்த எதிரை நகர்த்துவார். சிவ சக்தி எனும் பண்டைய நம்பிக்கைக்கும் வேத நம்பிக்கைக்குமான இணக்கத்தை உபநிடதங்கள் வழி செய்துகொண்டு ஒருவகையான ஒற்றுமையை ஏற்படுத்திக்கொண்டதாக ராய் எழுதுகிறார்.

பண்டைய இந்திய வரலாற்றிற்கு எவர் எவர் எவ்வளவு தரவுகளை எடுத்துக்கொண்டாலும் அதை பின்னித் தருவதில் தங்கள் கற்பனையை ,நிருபிக்க முடியாத மன விழைவை அதில் ஏற்றாமல் இருக்க முடிவதில்லை. இதைக் குறித்து பாஷம் இவ்வாறு சொல்வார்

பாஷம் வியப்பூட்டும் இந்தியாவில் தனது அணுகுமுறை பற்றி தெரிவித்திருந்தார்

The early history of India resembles a jigsaw puzzle with many missing pieces; some parts of the picture are fairly clear, others may be reconstructed with the aid of controlled imagination"

இந்த controlled imagination பாஷமின் சிறப்பாக சொல்லப்படுகிறது.

டிசம்பர் 19 2023

Communism in Indian Politics பவானி சென் குப்தா அவர்களால்  எழுதப்பட்டு 1972ல் வெளிவந்த நூல்.  500 பக்கங்களை நெருங்கும் பெரிய நூல் தான். தெற்கு ஆசியா கழகம் என்பதில் விவாதிக்கப்பட்டு வெளிவந்த நூல். சென் குப்தா அவர்கள் அப்போது ஜே என் யு பல்கலையில் பணிபுரிந்து கொண்டிருந்தவர்.

இந்தியாவில் ‘a force of international communism’ எனப் பிறந்த கம்யூனிச இயக்கம், இந்திய விடுதலைக்கால அனுபவம், இந்திய அரசமைப்பு, நாடாளுமன்ற அரசியல் ஆட்சிமுறை அனுபவம் ஆகியவற்றின் நீண்ட பயணத்தில் எவ்வாறு தன்னை Indian Political force ஆக நிறுவிக்கொள்ளவேண்டிய போராட்டத்தை நடத்தி வந்தது என்பதை விரிவாகப் பேசுகிற நூல் இது.

இந்தியாவில் பிறந்த கம்யூனிச இயக்கம் உடைவுகளை 1964, பின்னர் அதில் 1969 உடைவு- அதிலும் கூட பல உடைவுகள் என சந்தித்தாலும் இரண்டு மெயின்ஸ்ட்ரீம் இயக்கமாக CPI, CPM இரண்டும் National and Regional ( linguistic state ) polityல் தங்களை நிற்க வைத்துக்கொள்ளும் போராட்டங்களை , மேற்கொண்ட உத்திகளை இந்த நூலாசிரியர் பேசுகிறார்.

கம்யூனிச இயக்கம்/கட்சி உதயமானதிலிருந்து மெல்ல மெல்ல தன்னை transform செய்துகொள்ளும் போராட்டங்களை நடத்திக்கொண்டது. சோவியத் மற்றும் சீனக் கட்சி செல்வாக்கிலிருந்து முற்றிலுமாக விடுபட்டு, இந்திய நிலைமைகளை தங்கள் சொந்த அனுபவத்திலிருந்து பார்த்து அதற்கேற்ப தங்கள் செயல்பாடுகளை தக அமைத்துக்கொள்ளும் விரிவான பயிற்சிக்கான போராட்டமாகவும் இது அமைந்தது. 1951ல் மெதுவாக துவங்கி, ஸ்டாலின் மறைவிற்கு பின்னர், சோவியத் 20வது கட்சி காங்கிரஸ்க்கு பின்னர் இதன் தீவிரப் பாதையை நிகழ்ந்த மாற்றத்தை இந்நூலாசிரியர் காட்டுகிறார்.

இந்தியாவில் கம்யூனிச இயக்கம் வளர்ந்த முதல் 50 (1972 வரையிலான) ஆண்டுகள் வரலாற்றை இந்நூல் தொட்டுக்காட்டி, இக்காலங்களில் கருத்துருவாக்கத்தில், அது தன்னை இந்தியத் தன்மை அரசியல் போக்கில் நிலை நிறுத்திக்கொள்ள பெற்ற உருமாற்றங்களைப் பேசுகிறது.

தேர்தலில் நிற்பது என்பதை 1945லேயே ஏற்றுகொண்டு labour Constituencyக்களில் வெற்றியை சிறிதளவு பெற்றாலும், 1951க்குப் பின்னர் பாராளுமன்ற அரசியல் சோதனைக்கு இந்திய கம்யூனிசம் தன்னை ஒப்புகொடுத்து, மக்களின் அங்கீகாரத்தை பெறும் போராட்டத்தில் இறங்கியது. உலகின் முதல் சோதனையாக தேர்தல் வழி ஆட்சியைப் பெறுதல் என்பதை கேரளத்தில் நடைமுறையாக்கியது. தொடர்ந்த நேரு ஆட்சி- நம்பூதிரி ஆட்சி கவிழ்ப்பு,

சர்வதேச கம்யூனிச இயக்க வேறுபாடுகள்- உட்கட்சி வேறுபாடுகள் இந்திய கம்யூனிச இயக்க சோதனையில் உடைவை உருவாக்கின.

கேரளா ஆட்சி, வங்க ஆட்சி, திரிபுரா ஆட்சி என்ற மாநில சோதனைகள் நடந்தன. இந்தியா போன்ற விரிந்த பரப்புள்ள நாட்டில் இரு வழி சோதனைகளை சிபிஅய் மற்றும் சிபிஎம் நடத்திப் பார்த்ததாக சென்குப்தா சொல்கிறார். சிபிஅய் national power வழியாக மெதுவாக கீழிறங்கி பரவலாகுதல், சிபிஎம் மாநில அதிகார தளங்கள் வழியாக தேச அதிகாரம் நோக்கி செல்தல் என்கிற இரு சோதனைகளை இந்திரா ஆட்சி காலத்தில் சோதித்ததாக சென் எழுதியுள்ளார். சிபிஎம் எல் முற்றிலுமாக சீனப்பாதை- அழித்தொழிப்பு எனச் சென்றதையும் இந்நூல் பேசுகிறது. இந்த நூலின் ஆய்வுப் பாதையின் சாரமாக இந்தப் பாராவைச் சொல்லலாம்.

The fundamental dilemma of communism in India can be stated in simple terms. The communists are pitted against a state and a political system created and devised and evolved by the bourgeosie to which the communists could make little positive contribution on their own.

The choice that has baffled them all these years is whether they should work within the system and use its institutions and instruments to gradually change its qualitative character, or whether they should try to overthrow the system and replace it with another based on radical realignment of productive relationships. The United CPI began with the overthrow tactic, then swung to the opposite tactic of working within. (page 404)

இன்னும் ஒரு பாராவில் வேறு ஒரு பிரச்சனையையும் அவர் எழுப்புகிறார்.

Another problem- the influence of regional cultures on indian communism. If Russian communism is Marxism plus slavic culture, chinese communism with Han culture, can Indian communism be immune to many cultures that go into the making of what can loosely be described as Indian culture? ’Regional – nationalist’ sentiments are appear to be strong among middle class intelligentia

சில இடங்கள் சில விமர்சன பார்வைகளை தோழர்கள் ஏற்கமுடியாமல் போகலாம். ஆனால் இந்த நூல் ‘கருத்துருவாக்கம்’ - conceptual என்பதற்கு சற்று நெருக்கமாக போகும் புத்தகம் என்பதால் ஆர்வம் உள்ளவர் படித்துப் பார்க்கலாம்.

டிச 19, 2023

ரொமிலா தாப்பர் எழுதிய Early India From the origins to AD 1300 தமிழில் முற்கால இந்தியா தொடக்கக் காலத்திலிருந்து கி பி 1300 வரை என வந்துள்ளது. 900 பக்க அளவிலான வரலாற்று ஆய்வு நூல்.

ஆங்கிலத்தில் மட்டுமே இருந்தால் பலருக்கும் போய்ச்சேராமல் இருந்துவிடக்கூடாது என்ற நல்லெண்ணத்தில் NCBH இந்த பெரும் பணியை மொழிபெயர்ப்பாளர் முதுகுன்றன் மூலம் செய்துள்ளனர்.

நம் மீது காலம் காலமாக வந்து அரசியல் காரணங்களுக்காக படிந்துள்ள வரலாற்று கருதுகோள்கள் பலவற்றை ரொமிலா கேள்விக்கு உள்ளாக்குவார். மொழி, நாகரீகம், சமூகம் பண்பாடு அப்படியே கலப்பில்லாமல் ஊடாட்டமில்லாமல் தூயதாக பல ஆயிரம் ஆண்டுகளாக நம்மிடம் இருந்து வருகிறது என்ற கற்பிதத்தை ரொமிலா கட்டுடைப்பார். வரலாற்றில் ஆர்வம் உள்ளவர் வாங்கி படித்து பயனடையலாம்

டிச 19

மே 1941ல் பிரிட்டிஷ் நாடாளுமன்ற உறுப்பினராக இருந்த எலியனார் ராத்போன் என்கிற அம்மையார் Indian friends என விளித்து கடிதம் ஒன்றை எழுதியிருந்தார். சும்மா ஒத்துழையாமை செய்து கொண்டு இருக்காதீர்கள். பிரிட்டிஷ் உங்கள் மக்களுக்கு செய்த நன்மைகளை அறிந்த எந்த முற்போக்காளரும் லண்டனில் உங்களை ஆதரிக்கவில்லை என அறிவுரை சொல்லியிருந்தார் அந்த அம்மையார்.

இதற்கு படுத்த படுக்கையாக கிடக்கும் நிலையிலும் தாகூர் சுடச்சுட தன் பதிலை ஜூன் 4 , 1941 அன்று தந்திருந்தார். அவர் ஆகஸ்ட் 7 அன்று மறைந்தார்.

தாகூர் பதிலை பார்க்கும் முன்னர் என்ன நடந்துகொண்டிருந்தது என்பதை சுருங்க பார்க்கலாம். இரண்டாம் உலகப்போரில் இந்தியாவை இழுத்துவிட்டனர் பிரிட்டிஷ் ஆட்சியாளர். காங்கிரஸ் கடுமையான எதிர்வினைகளை தந்தது. 1940ல் காந்தி நேரு ராஜாஜி படேல் ஆசாத் ஆகிய பலர் மத்தியில் சூடான மாறுபட்ட புரிதல்களுடன் கொந்தளிப்பான விவாதங்கள் நடந்துகொண்டிருந்தன. எனது

உண்ணா விரதமா, தனிநபர் சத்தியாகிரகமா என்ற புள்ளியில் விவாதத்தை இறுதிப்படுத்தியிருந்தார் காந்தி. காந்தி வழியல்லாது, சொந்த வழியில் காங்கிரஸ் செல்லமுடியாத நிலையை காங் தலைவர்கள் உணர்ந்தனர்.

முதல் தனிநபர் சத்தியாகிரகி வினோபா என்றவுடன், அவரை நாட்டில் எவருக்கு தெரியும் என்ற கேள்வி உள் விவாதத்தில் எழுந்தது. காந்திக்கோ இப்போராட்டம் அகிம்சை போர் எதிர்ப்பு என்பதுடன் பேச்சுரிமை எழுத்துரிமை என்பதற்காகவும் அமைக்கப்படுவதால் lesser political personality தேவை எனக் கருதினார். அடுத்து நேருவை அனுப்பலாம் என்றார். வினோபா சத்தியாகிரகம் துவங்கியவுடன் கைது செய்யப்பட்டு மூன்று மாதம் சிறை பெற்றால், நேருவோ துவங்குவதற்கு முன்னரே கைது செய்யப்பட்டு 4 ஆண்டுகள் சிறை பிடிக்கப்பட்டார். வைஸ்ராயின் இந்த செயலால் சர்ச்சிலே அதிர்ந்து போனார். இந்த சூழலில் எலியனார் கடிதம் விவாதமானது.

தாகூர் பதில் சொன்ன பிறகு நான் சொல்லத் தேவையில்லை, அதுவே போதும் என காந்தி பதில் சொன்னார். தாகூர் பிரிட்டிஷ் ஆட்சியின் அவலங்களை போட்டு உடைத்தார். என்ன எங்களை நாகரிகப்படுத்தியுள்ளீர்கள்- உங்களிடமிருந்த எந்த best யை அளித்தீர்கள்- எங்களின் கலாச்சாரம் உட்பட எல்லா வளர்ச்சியையும் தடுத்துள்ளீர்கள். சோவியத் புரட்சியின் 15 ஆண்டுகளில் 98 சத மக்கள் கல்வியறிவு பெற்றனர். உங்களின் ஆட்சி சாதனை என்ன- 1 சதம் பேருக்கு ஆங்கிலம் தெரிந்திருக்குமா என்ன கல்வி கொடுத்ததாக தம்பட்டம் அடிக்கிறீர்கள். இந்தியாவின் கிராமங்களை பாருங்கள் ஒட்டிய வயிறு நோஞ்சான்கள் எங்கும், பெண்கள் குடிக்க சொட்டு தண்ணீர் தேடி எப்படி அலைகிறார்கள்- சட்டம் ஒழுங்கு லட்சணமும் கெட்டுத்தானே இருக்கிறது- என சகல கோணங்களிலும் பிரிட்டிஷ் ஆட்சியின் அவலத்தை படுக்கையிலிருந்து தன் 81 ஆம் வயதில் தாகூர் படம் பிடித்து அந்த அம்மையாருக்கு மட்டுமல்லாமல், உலகிற்கே காட்டினார். Inputs vol 8 Mahatma by Shushila Nayar

டிச 18, 2023

Opposition mukth parliament mass suspension of MPs, hurting damaging democracy .

Vinasha kale vibaridha buddhi

One may assume that one's actions are the best. Life never assume a single color. Life may kill even a beautiful theory.

Com Namari

டிச 18

Dr Ambedkar said so as quoted in the Supreme Court Judgment on Art 370- JK page 328/ 476

" …the basic principle of federalism is that the legislative and executive authority is partitioned between centre and states not by any law to be made by the centre but by the constitution itself. This is what constitution does. The states under our constitution are in no way dependent upon the centre for their legislative or executive authority. The centre and the states are coequal in this matter. It is difficult to see how such a constitution can be called centralism"

SC said So page 329/ 476

Art 1.1 India that is Bharat, shall be union of states . Art 1.1 indicates that the sates are essential and indispensable to the constitutional structure of the country. The union cannot exist without the existence of the states

டிச 17

Wishing all the pensioners on this day a healthy smileful life

டிச 16

Beyond likes and dislikes of the recent Supreme Court Judgment on J&K art 370, no fair and robust mind interested in modern history and politics would leave the judgment unread.

The Judgment goes on 476 pages and it seems one of the fantastic documents on modern history of India, its formation of Constitution and acceding of princely states, transforming itself as union, resting sovereignty on it's people without any invocative clauses.

It seems that the document namely the Judgment is coauthored by the available best legal minds of India , though many argued for and against .

One may have grievances or hilarious over the Judgment but will not fail to see the authenticated historical facts that are twined in that.

I am not a man from the school of legal prudence but a student of modern history of India. So my quest is on that basis. One may have patience and time to read all the 476 pages of that Judgment, but if they find then that would enhance their understanding of India, how it was constructed as Union by the framers of the constitution.

டிச 15

The need of the hour is to educate our masters. Only it is not the cultured few that educate the untutored many but it is the dumb millions that must educate the vociferous few who occupy the positions of power in the halls of honour

-PATTABI SITHARAMAIAH (His book on Gandhi and Gandhism)

டிச 14, 2023

அறிஞர் அண்ணாவின் எண்ணித்துணிக கருமம்

அமைப்புகளின் செவ்வியல்- organisational classic

திராவிட முன்னேற்ற கழகம் 17-9-1949 அன்று உதயமானது. அக்கட்சி விரைவில் தனது 75 ஆண்டுகளை காண்கிறது. திமுக 60 ஆண்டுகள் சட்டமன்ற, நாடாளுமன்ற பங்கேற்பில் மாபெரும் அனுபவத்தை பெற்றுள்ளது. 55ஆண்டுகள் ஆட்சி அனுபவத்தை அதிமுகவுடன் சேர்த்தால் அண்ணா வழி திராவிட கட்சிகள் பெற்றுள்ளன. தமிழக வரலாற்றில் இப்படிப்பட்ட பெரும் மாறுதலை அண்ணாவின் tactics மட்டுமே உருவாக்கியது என்றால் அது மிகையாகாது. அண்ணாவின் 317 பக்க அளவிலான எண்ணித் துணிக கருமம் கைப்பிரதியை ஒரு முறையாவது தமிழர் வாசித்து பார்ப்பது அரசியல் உலகிற்கு நலமானது. அது தமிழகத்தில் அரசியல் திசை மாற்றத்தை உருவாக்கிய செவ்வியல் ஆவணம்.

1951ல் திமுகவின் அமைப்பு விதிகள் முதல் மாநாட்டில் ஏற்கப்பட்டன. அதன் அமைப்புவிதியில் காணப்பட்ட முக்கிய விதி 2, 3 1963-64 காலத்தில் திருத்தப்பட்டது. அமைப்பு விதிகள் கால இடைவெளியில் பல மாற்றங்களைச் சந்தித்து 2003ல் கலைஞர், பேராசிரியர் ஒப்பத்துடன் விதிகள் இன்று நமக்கு கிடைக்கின்றன. இந்த விதிகள் தான் தேர்தல் கமிஷனர் அலுவலகத்தில் கொடுக்கப்பட்டுள்ளன.

அந்த அமைப்பு விதிகளில் விதி 2 குறிக்கோள் Aims பற்றிப் பேசுகிறது. ஆங்கில வரிகளாக

In conformity with the aims as laid down by Arignar Anna, the aim of the Kazhagam is to strive and forge Dravidian Cultural cooperation among the four linguistic states of Tamilnadu, Andhra Pradesh, Kerala and Karnataka, within the frame work of the sovereignty, unity and integrity of India and within the ambit of the Constitution of India. The Dravida Munnetra Kazhagam bears true faith and allegiance to the constitution of India, as by law established and the principles of socialism, secularism and democracy and would uphold the sovereignty, unity and integrity of India.

கலைஞர் அவர்கள் அண்ணாவின் ‘எண்ணித் துணிக கருமம்’ எழுத்தை வெளியிட்ட 2003 மே 1 அன்று வெளி உலகிற்கு தந்தார். முன்னுரையில்- குறிக்கோளின்- தமிழாக்கத்தை இவ்வாறு தந்துள்ளார்

“ அண்ணா வகுத்த குறிக்கோளுக்கு ஏற்ப தமிழகம், ஆந்திரம், கேரளம், கருநாடகம் ஆகிய நான்கு மொழி வழி மாநிலங்களிலும் இந்திய அரசுரிமை ஒருமைத்தன்மை, அரசியல் அமைப்புச் சட்டம் ஆகியவற்றுக்கு உட்பட்டு நெருங்கிய திராவிட கலாச்சார கூட்டுறவு நிலவப் பாடுபடுவது, அரசியல் நிர்ணய சட்டத்தில் முழு நம்பிக்கையும், பற்றுறுதியும் கொண்டு சமதர்மம், சமயச் சார்பின்மை, ஜனநாயகம் ஆகிய லட்சியங்களில் முழு ஈடுபாடும் பற்றும் கொண்டு இந்திய நாட்டின் இறையாண்மை, ஒற்றுமை, ஒருமைப்பாடு ஆகியவற்றைக் கட்டிக் காப்பது”

அடுத்து விதி 3 கோட்பாடு Ideals

“ Having strict adherence to the principles of duty, dignity and discipline stressed by Arignar Anna as the basis, the party will strive to safeguard the democratic rights in politics, to establish a society free from any kind of exploitation, to effect reforms in society in order to bring about a renaissance based on rationalism, to eradicate poverty in the economic field, to find out ways and means, to secure the welfare of all on the basis of socialism, to promote the state language without giving room for domination by other languages in order to secure them due place of importance, to decentralise the powers concentrated in the centre and to secure state autonomy for the states and genuine Federation at the centre”

இதை கலைஞர் தமிழில் இவ்வாறு தந்துள்ளார்

“அறிஞர் அண்ணா அறிவுறுத்திய கடமை- கண்ணியம்- கட்டுப்பாடு அடிப்படையில், அரசியலில் ஜனநாயக உரிமைகளைப் பாதுகாத்து, ஆதிக்கமற்ற சமுதாயத்தை அமைத்திடவும், பகுத்தறிவு அடிப்படையில் மறுமலர்ச்சிக்கான சீர்திருத்தப்பணி ஆற்றிடவும், பொருளாதாரத்துறையில் வறுமையை வென்று, சமதர்ம அடிப்படையில் எல்லோரும் நல்வாழ்வு பெற வழிவகை கண்டிடவும், பிறமொழி ஆதிக்கத்திற்கு இடங்கொடாமல் அந்தந்த மாநில மொழிகளை வளர்த்திடவும் அவைகளுக்கான உரிய இடத்தைப் பெற்றுத் தரவும், மத்திய அரசில் குவிந்து கிடக்கும் அதிகாரங்கள் பரவலாக்கப்பட்டு, மாநிலங்களில் சுயாட்சியும்- மத்தியில் கூட்டாட்சியும் உருவாகிடவும் தொண்டாற்றுவது”

மேற்கண்ட மாற்றங்களை செய்ய வேண்டியதன் அவசிய பின்னணியை விளக்கி அண்ணா அவர்கள் கையெழுத்துப் பிரதியாக 300 பக்கங்களுக்கு மேல் எழுதி வைத்திருந்தார். அந்த உயர்தர கிளாசிக்கல் ஆவணத்தை 40 ஆண்டுகள் பத்திரமாக

பாதுகாத்து வைத்திருந்து கலைஞர் அவர்கள் அப்படியே அண்ணாவின் கையெழுத்து பிரதியை 'எண்ணித் துணிக கருமம்' என்கிற புத்தகமாக வெளி உலகிற்கு பகிரங்கப்படுத்தினார். வெளியிடமுடியாத பல தன்னிடம் இருப்பதாகவும் முன்னுரையில் கலைஞர் குறிப்பிட்டிருப்பார். அவைகளும் கால சூழலில் வெளியானால் வரலாற்று மாணவர்களுக்கு பயனுள்ளதாக அமையும்.

அண்ணாவின் இந்த கையெழுத்து பிரதி Tamil digital library ல் கிடைக்கிறது. எவரும் படித்துவிட முடியும். அந்த ஆவணம் அண்ணாவின் தலைமை பொறுப்பை, ஓர் அமைப்பை எப்படி அடிப்படை கொள்கைக்கே நெருக்கடி ஏற்படும் காலத்தில் கொண்டு செல்ல வேண்டியிருக்கும் என்பன குறித்த செவ்வியல் பாடமாக இருக்கிறது. தமிழ் படிக்கக் தெரிந்த அனைத்து அமைப்பில் வேலை செய்வோரும் அதில் கற்க ஏராளம் இருக்கிறது. திமுக கட்சி அமைப்பினர் மட்டுமல்ல , வேறு அமைப்பினர் கூட கூட்டாக பொருட்படுத்தி வாசிக்கும் அளவிலான மிக மிக பொறுப்பான அண்ணாவின் ஆவணமது. நாடாளுமன்றத்தில் 1963 ஜனவரி, மே, டிசம்பரில் அண்ணா ஆற்றிய உரைகளுடன் அண்ணாவின் கையெழுத்துப் பிரதியை சேர்த்து வாசித்தல் புரிதலை கூட்டும்.

60 ஆண்டுகளுக்கு முன்னர் அண்ணா எடுத்த இந்த 'பிரிவினை கொள்கை நிலைப்பாட்டில் மாற்றம்-திமுகழகத்தை அரசாங்க சட்ட வேட்டைகளிலிருந்து காத்து பிரம்மாண்டமாக வளர்த்தல்' என்கிற 'பாசறை காப்பு- படை காப்பு, விதைநெல் காப்பு- பயிர் காப்பு' என்கிற tactics இன்றளவும் அக்கட்சியை காத்து நிற்கிறது. இதனால் தான் அக்கட்சியின் அமைப்பு விதிகளில் அண்ணா வழி என்கிற invocative clause இன்றளவும் மாற்றப்படாமல் இருக்கிறது என்கிற புரிதலும் தேவைப்படுகிறது.

டிச 13, 2023

Milestones இந்திராணி ஜெகஜீவன்ராமின் நினைவுகள் போன்ற புத்தகங்கள் விடுதலைக்கு பின்னரான நவீன இந்திய அரசியலின் நுட்பங்களை புரிந்துகொள்வதற்கு பயன்படலாம்.

எதை இந்திராணி போன்றவர் வெளிப்படுத்த முடிகிறது, எங்கு அவர்கள் மௌனமாகி போகின்றனர் என்பதை கவனப்படுத்திக்கொள்ளமுடியும்.

அடித்தட்டில் சிறு கிராமத்திலிருந்து உயர் அதிகாரம், சொகுசு தோரணைகளுக்கு செல்பவர்களின் பிம்பங்களும் அவர்கள் உளவியல் பாடுகளும் இந்நூல் போன்றவற்றில் ஓரளவிற்கு கிடைக்கும்.

இந்திராணி , கணவனே கண்கண்ட தெய்வம்- மாமியாரை மெச்சும் மருமகள் என்ற பிம்பத்தை எனக்குத் தருகிறார். நேரு கால காபினட்டிலிருந்து இந்திரா கால வங்கதேச உதயம் வரையிலான காலம் இங்கு சித்தரிக்கப்பட்டுள்ளது. நிகழ்ந்த அத்துனை நல்லதிலும் ஜெகஜீவன் பங்கு, பங்கே விதந்து பேசப்பட்டுள்ளது. ஜெகஜீவனுக்கு சோதனை என்றால் அவையெல்லாம் சதிகளாக, பொறாமை பொச்சரிப்புகளாக சுட்டிக்காட்டப்பட்டுள்ளது.

ஜெகஜீவன் பீகாரின் கிராமத்திலிருந்து டெல்லியின் உயர் ஆட்சி அதிகாரத்தின் பெருவெளிகளைக் கண்டவர். அரசியலில் விளைந்து நின்றவர். பாபு ராஜேந்திரபிரசாத்தின் நம்பிக்கைக்குரியவராக இருந்தவர். காங்கிரசின் மேல்தட்டு விவகாரங்களை அவர் மூலம் பார்த்தவர். தொழிலாளர் அமைச்சராக , விவசாய அமைச்சராக, தகவல் தொடர்பு, போக்குவரத்து, ரயில்வே, பாதுகாப்பு என பல்வேறு இலாகாக்களின் நுட்பங்களை அறிந்தவர். சிலநேரம் radical toneகளை வெளிப்படுத்தியவர்.

காமராஜரின் கே பிளானால் ஜெகஜீவன் பழிவாங்கப்பட்டார் என்ற உணர்வை இந்திராணி வெளிப்படுத்தியுள்ளார். நேரு மறைவிற்கு பின்னர் லால்பகதூர் அமைச்சரவையில் 20 ஆண்டுகளுக்கு முன்பே அவர் பெற்ற அதே தொழிலாளர் துறை தரப்பட்டபோது அவரது மனைவி, மகள் மீரா, மகன் சுரேஷ் கோபமடைந்தனர். மொரார்ஜியைவிட தான் சீனியர் என்ற உணர்வு நியாயமாகவே ஜெகஜீவனிடம் இருந்தது.

சிண்டிகேட் இந்திரா காங்கிரஸ் என்கிற பிளவு வந்தபோது, மொரார்ஜியா இந்திராவா என வெளிப்படையாக நிற்காமல் ஜெகஜீவன் இருந்தார் என்கிற சந்தேகம் இருபக்கமும் இருந்தது. இந்திரா சாதுர்யமாக ஜெகஜீவனை இழுத்துவிட்டார் என்பதை இந்திராணி எழுத்துக்கள் காட்டும். குடியரசு தலைவர் தேர்வு குறித்து காங்கிரஸ் கமிட்டி விவாதித்தபோது ஜெகஜீவன் பெயரை இந்திராகாந்தி முன்மொழிந்தார். மொரார்ஜி எதிர்த்ததை இந்திரா சாதகமாக்கிக்கொண்டார். அத்தேர்தலில் வி வி கிரியை வெற்றிபெறவும்

வைத்தார். உடைந்த காங்கிரசின் இந்திரா பிரிவின் அகில இந்திய தலைவராக ஜெகஜீவன் ஆக்கப்பட்டார். இந்திரா காங்கிரஸ் என பொதுவாக அறியப்பட்ட ஒன்றை ஜெகஜீவன் காங்கிரஸ் என இந்திராணி எழுதியுள்ளார்.

மாடு கன்று சின்னம் கூட தன் மகன் சுரேஷ் சொல்லி, காங்கிரஸ் சின்னமானதாக இந்திராணி செய்தி தருகிறார். வங்கதேச விடுதலைக்கான - அகதிகள் சமாளிப்பு பெயரிலான யுத்தத்தின் போது ஜெகஜீவன் பாதுகாப்பு அமைச்சர். அந்த வெற்றிக்கு பின்னரான அரசியல் சாதுர்யத்தை தன் கணவர் அற்புதமாக வெளிப்படுத்தியதாக, வங்க விடுதலைக்கு காரணமாக இருந்ததாகவும் இந்திராணி பதிவு சொல்கிறது.

1972 உடன் இந்த ஆங்கில மைல்ஸ்டோன் பதிவை நிறுத்திவிட்டனர். இந்நூலுக்கு முன்னுரை எழுதிய மீராகுமார் கீழ்கண்ட வரிகளை எழுதியுள்ளார்.

The unpublished script, apart from offering insight into other events, also gives an insider's account of the Emergency and the subsequent events that changed the course of India's political history. Babuji was keen that Ma's work be published in English as well

இந்த நூலை படித்தபோது எனக்கு தோன்றிய உணர்வு- ஜெகஜீவனை குடியரசு தலைவராகவோ, பின்னர் ஜனதா காலத்தில் பிரதமராகவோ ஆக்க இந்திய அரசியல் தயங்கிவிட்டதோ என்பதாக அமைந்தது. அவர் நேரு , ஜாகிர் ஹுசைன் , நாரயணன், அப்துல்கலாம், மன்மோகன் போல் அறிவுஜீவியாக இல்லாமல் இருந்திருக்கலாம். அரசியல் சாதுர்யத்தில், நடைமுறை சார்ந்த உத்தி முடிவுகள் எடுப்பதில் அவர் குறைந்தவராக இருந்திருக்கமாட்டார். கே ஆர் நாரயணன், அப்துல்கலாம் போன்றவர்களைவிட பெரும் அரசியல் பங்களிப்பை செய்திருந்தும் , அரசியல் உலகம் அவரை குடியரசுதலைவராக்காமல் விட்டது. பிரணாப் விட கூடுதலான அரசியல் பங்களிப்பை அவரிடம் நாம் காணமுடியும்.

சரண் சிங், தேவகௌடா, வி பி சிங், குஜ்ரால், சந்திரசேகர் போன்றவர்கள் வரமுடிந்த பிரதமர் பதவிக்கும், ஜனதா சோதனையில் ஜெகஜீவன் வரமுடியாமல் போனது. அவரிடம் அவர் குடும்பத்தார்களிடம் அதிகார சொகுசு விருப்பார்வங்கள் இருந்திருக்கலாம். அவர் ஒரு போதும் டிக்டேடர் ஆகியிருக்க மாட்டார். விடுதலைக்கால மாண்புகளின் தன்மைகளை, ஜனநாயக பண்புகளை தவறவிட்டிருக்க மாட்டார் என்றே தோன்றுகிறது.

ஆங்காங்கே இடைவெளிகளையும் இட்டு நிரப்ப வேண்டிய தேடல்களையும் இந்த நூல் வரலாற்று மாணவர்களுக்கு வேலைகளாக கொடுத்திருப்பினும் சமகால அரசியலுக்கு , ஜெகஜீவன் வழியாக இந்திராணி அளித்துள்ள பங்களிப்பு என இந்த மைல்ஸ்டோன் புத்தகத்தைக் கருத முடியும்.

இந்திய அரசியல் உள் விளையாட்டுகள் , பதவிக்கான அரசியல் snake and ladderல் நடைபெறுபவை, பல்வேறு பிரச்சனைகளில் முடிவுகள் எப்படி எவர் தாக்கத்தில் எடுக்கப்படுகின்றன, அவற்றின் பாரதூர விளைவுகள் குறித்து ஏராள புத்தகங்கள் தேவைப்படுகின்றன. அப்படி ஒன்றாக பத்திரிகையாளர் நிரஜா செளத்ரி எழுதிய ஒன்று how PM decides விவாதிக்கப்பட்டு வருகிறது. Insiders account என்கிற முடிந்தவரை நேர்மையான பதிவுகள் தான் இந்திய ஜனநாயகத்தை வலுப்படுத்தும் , புரிதலை மேம்படுத்த உதவக்கூடும்.

டிச 12, 2023

வாஜ்பாய் அரசாங்கம் ஆட்சி 2004 தேர்தலை இந்தியா ஒளிர்கிறது என்ற முழக்கத்துடன் சந்தித்தனர்.ஆனால் பாஜக தோல்வியடைந்து சோனியா தலைமையில் காங்கிரஸ் கூட்டணியுடன் வென்றது. டாக்டர் மன்மோகன்சிங் பிரதமராக்கப்பட்டார்.

ஏன் தோல்வி என பாஜக செயற்குழு தன் ஆய்வினை செய்தது. அத்வானி அவர்கள் தனது என் நாடு என் வாழ்க்கை எனும் பெரும் சுயவரலாற்று அரசியல் புத்தகத்தில் இது குறித்து தன் கருத்தை விரிவாக பதிவு செய்திருப்பார். ஏன் கட்சி தோற்றது?

இந்தியா ஒளிர்கிறது என்பதை அவசரப்பட்டு ஐகான் முழக்கமாக்கியிருக்கக்கூடாது. எதிர் கட்சிகள் வேறு முன்னேற வேண்டிய அம்சங்களை சுட்டிக்காட்டி எங்கே ஒள்ர்கிறது என பிரச்சாரம் செய்ய வாய்ப்பாக்கிவிட்டோம்.

தொகுதியின் மக்களுடன் ஜீவித தொடர்பற்ற 90 எம்பிக்களுக்கு மீண்டும் வாய்ப்பளித்த தவறை கட்சி செய்தது.

ஒவ்வொரு தேர்தல் கட்சியும் மூன்று அம்சங்களை கணக்கில் கொள்ளவேண்டும். ஒன்று தொகுதியின் புவி அம்சம், இரண்டாவது தொகுதியில் அதன் ஸ்தாபன பலம் சார்ந்த அம்சங்கள், மூன்றாவது அக்கட்சி கொண்டிருக்கும் ideological issues and connectivity. இதை மிக கவனமாக இந்த புத்தகத்தில் அத்வானி அவர்கள் விவரிக்கிறார்.

ஜெய்ப்பூரில் தொடர்ந்து வெற்றி பெற்ற பாஜக எம்பி மற்றும் அவரது சகாக்களும் ஒன்றை செய்துகொண்டே வந்தார்களாம். தொகுதியில் சாவு எனத்தெரிந்தால் அங்கு நின்று இறுதி நிகழ்வுவரை இருப்பது பிடி சாம்பலை வாங்கிப்போய் ஹரித்துவாரில் கரைப்பது என்ற செண்டிமெண்டல் கனெக்ஷனை தக்க வைத்தார்களாம்.

அடுத்து எம்பிக்கள், கட்சி பொறுப்பாளர்கள் எங்காவது அதிகாரத்தொனியில், மக்களை அலட்சியமாக நடத்தினால் , அவர்கள் பிரச்னையை காதுகொடுக்காமல் போனால் தோல்வி உறுதியாகும் என்கிறார் அத்வானி.

எல்லாவற்றிற்கும் மேலாக நடந்த பெரிய தவறு ஒன்றை அவர் சுட்டிக்காட்டியுள்ளார். அது sangh fraternity அதாவது சங் பரிவார் ideological roots and relations பழுதாகிப்போனது என்பதைச் சொல்கிறார். தாழ்வில் காலம் முழுக்க நின்றவர்களை, உயர்வில் அலட்சியம் செய்ததால் ஏற்பட்ட விளைவாக அத்வானி அத்தோல்வியைப் பார்த்துள்ளார்.

அத்வானி ஏன் தோல்வி என்பதற்கு லிஸ்ட் செய்த காரணங்கள்..

Many faulty and hasty decisions were taken in candidate selection

Party workers sullen or insufficiently inspired.. we ignored our soldiers the karyakartas

Shortcomings in ‘party - Government ‘ coordination in many states

Differences were rooted in personal ambitions and animosities.

The ethos of struggle sacrifice discipline and idealism the hallmark of BJS BJp was weakening

Neglecting our core ideological constituency Sangh Fraternity- lack of effective communication between senior party leaders and Sangh inspired organisations

மேற்கூறிய பாடங்களை கட்சிகள் தங்களுக்கு உரிய வகையில் பொருத்திப்பார்த்து எடுத்துக்கொள்ளவேண்டியதை படித்துக்கொள்ளலாம்

டிச 12

Politicalisation of working class is one of the most talked about subject in the TU movement. It is one of the most misunderstood subject also when equating that with party- isation . Polticalisation does not mean party-isation.

Com Namari

டிச 11

Too much power is unhealthy for those who exercise it and for those who suffer from it

- Louis Fischer in his Gandhi and Stalin page 16

டிசம்பர் 4 2023

Though the results of the state elections are standing as an empirical evidence of the people's mind flow, deep down they reflect cultural and subtle ideological psyches of the people .

The main fight is between the communal / caste psyche versus the modern secular concept but that is yet to get the grip of the Indian polity

dec 3

Cyclone heavy rain stay safe take care

டிசம்பர் 3 2023

அய்ம்பது ஆண்டுகளுக்கு மேலான வாசிப்பு பழக்கம் என்னிடம் தொடர்ந்து வருகிறது. Show case செய்வதற்காக இதை நான் சொல்லவில்லை. அனுபவ பகிர்வு என்ற வகையில் சொல்கிறேன். சிறிய அளவில் தொடங்கி விரிவான வாசிப்பு நோக்கிய பயணம். என்னைவிட பெரும் வாசிப்பாளர்கள் இலட்சக்கணக்கில் உள்ளனர் என்பதை நான் அறிவேன்.

மிகவும் slow reader களில் நானும் ஒருவன். இப்போதெல்லாம் கூட நாள் ஒன்றுக்கு சராசரி ஆங்கிலம் எனில் 80 பக்கங்கள், தமிழ் எனில் 100 பக்கங்கள் வாசிக்க முடிகிறது. மார்க்சிடம் மெல்ல மெல்ல சென்று எப்போதும் மார்க்ஸ் என்பதிலிருந்து அவ்வப்போது மார்க்ஸ் என்ற நிலைக்கு வாசிப்பு என்னிடம் மாறியுள்ளது.

பல இசங்கள், பல அமைப்பு சார்ந்த எழுத்துக்களை படிக்கின்ற பழக்கம் வெகுகாலமாகவே இருந்து வருகிறது. மார்க்ஸ் மிகச் சரியானவர் என்ற முன் முடிவுடன், பிறர் எழுத்துக்களில் என்ன தவறு கண்டுபிடிக்கலாம் என வாசித்த முறை குறைந்துவிட்டது. நானே சரியானவன், என் அமைப்பே உலகின் உன்னதம், என் இசமே இரட்சகன் என்ற பிம்பங்கள் ஏதும் என்னிடம் இப்போதெல்லாம் தொழிற்படுவதில்லை. ‘அப்பா எவ்வளவு வேலை’ என்று அதன் மீதெல்லாம் புனிதம் ஏதும் கூட்டுகிற சூழல் தற்போது இல்லை. வாசிப்பு கூட எனக்கு புனிதமானது என்றெல்லாம் இல்லை. புரிதலை சற்று மேம்படுத்திக்கொள்ள முடியுமா என்பதற்கான முயற்சி என்றே உணர்கிறேன். புனிதப் பயணங்கள் - புனித செயல்கள் என எதையும் கொண்டாடும் மனம் தற்போது இல்லை. இதன் பொருள் முழுமையாக மரத்துப் போய்விட்டேன் என்பதில்லை. ஈரக் கசிவுகள் இருக்கின்றன.

ஒவ்வொரு தரப்பும் தன்னை எப்படி நியாயப்படுத்துகிறது என்பதைப் பொருட்படுத்தி வாசிக்கும் பன்முக உரையாடலுக்கான வாசிப்பு பழக்கம் கூடியுள்ளது. இதில் காந்தி உதவியுள்ளார்.

எப்போதாவது காந்தி என்பதிலிருந்து அவ்வப்போது காந்தி, பெரும்பாலும் காந்தி என்கிற வாசிப்பும் கூடியுள்ளது. பெரும்பாலும் காந்தி என்பது , டெண்டுல்கர் 8

வால்யூம்களை படிக்க ஆரம்பித்தபோது , தினமும் ஒரு மணி நேரம் காந்தி என்றானது. கடந்த 300 நாட்களாக அந்தப் பழக்கத்தை டெண்டுல்கர், பியாரிலால், சுசிலா எழுத்துக்கள் நீட்டிக்க வைத்துள்ளன.

சுசிலா நாயரின் மகாத்மா வால்யூம்கள், அவரது சகோதரர் பியாரிலால் மறைவையொட்டி துவங்கின. அந்த வால்யூம்களில் அண்ணன் தங்கையின் அபார உழைப்பு , பெரும் கடமையை உணர முடிகிறது. இன்று என் கையில் வால்யூம் 8. Mahatma Gandhi vol 8 Final Fight for Freedom by Sushila Nayar என்ற பெயர் சூட்டியுள்ளனர். இந்த set volumes 11 புத்தகங்களாக 10 வால்யூம்கள் கொண்டது. சுசிலா அவர்கள் எழுதிய இந்த 8 வது தொகுப்பு 1996ல் நிறைவு பெற்று 1997ல் வெளியானது. வழக்கம் போல் 1000 பிரதிகள் மட்டுமே போடப்பட்டுள்ளது. மனது வலிக்கத்தான் செய்கிறது. பெரும் உழைப்பை கொண்டாடும் மனங்கள் குறைவாக உள்ளனவே..

இந்த தொகுப்பில் அக்டோபர் 1939 முதல் 1944 மே முதல்வாரம் வரையிலான நிகழ்வுகள், குறிப்பாக ‘குவிட் இந்தியா’ தீர்மானம் போராட்டம் விரிவாக இடம் பெற்றுள்ளது. குவிட் இந்தியா போராட்டத்தின் வீரர் சாதிக் அலி முன்னுரை எழுதியுள்ளார் . வழக்கம் போல் இந்த தொகுப்பை அறிமுகப்படுத்தி சுசிலா விரிவான அறிமுகம் எழுதியுள்ளார். அவரின் பெரும் உழைப்பிற்கு எனது வணக்கம்.

டிசம்பர் 3 2023

வாழ்க்கை நமக்கு அளிக்கும் அல்லது நாம் நிரப்பி எடுத்துக்கொள்ளும் பாத்திரம் வழி செயல்படுகிறோம். பேசுகிறோம். செயலையும் சொல்லையும் அதைப் பொறுத்து அமைத்துக்கொள்கிறோம்

மகள்/ மகனாக பெற்றோர்களிடம் உரிமையை பேசியிருப்போம். பெற்றோராக கடமையை செய்கிறோம் குழந்தைகள் கண்டிப்பதை புரிந்துகொள்ளவில்லையே - அவர்கள் நல்லதுக்கு தானே சொல்கிறோம் என அங்கலாயித்திருப்போம். பாட்டி தாத்தாவாக குழந்தைதானே விடு என பெற்றோர்களிடம் முரண்பட்டு தலைமுறை இடைவெளி எனும் பொறிக்குள் சிக்கி நிற்போம். வீட்டின் பாத்திரம் மட்டுமல்ல நம் வாழ்க்கை.

அமைப்புகளில் நாம் தலைவர்களாக பாத்திரம் ஏற்கும்போது கறார் மொழியை அதிகார த்வனியை காட்டியிருப்போம். பொறுப்பு விடுத்து மாறுபட்டு நிற்கையில் நம் காலம் பொற்காலம் அத்துடன் வரலாறு துவங்கி வரலாறே முடிந்துவிட்டது போல் நினைத்துக்கொள்வோம். இப்ப உள்ளவர் என்ன செய்கிறார் என தினமும் மனதில் குற்றப்பத்திரிகை வாசிப்போம்.

ஒரு காலத்தில் நாம் கொண்டாடியதை பின்னொருகாலத்தில் விட்டு தள்ளி நிற்போம். ஒரு காலத்தில் அலட்சியம் செய்ததை நீக்கி அதை பெரிதாக கொண்டாட ஆரம்பிப்போம். அதை எல்லோரும் கடைபிடிக்க வேண்டும் என சிபாரிசிட்டு விழைவோம். இவையெல்லாம் நாம் நிரப்பி எடுத்துக்கொள்ளும் பாத்திரம் வழியே பேசுவோம்.

உலகில் நம்மைப்போலவே வெவ்வேறு பாத்திரங்கள் பேசியும் செயல்பட்டும் வருகின்றன என்பது நம் மனதில் பல நேரங்களில் நிழலாக கூட ஆடுவதில்லை. அவர்களும் நம்மை போலவே அவர்களுக்கு கிடைக்கப்பெற்ற, அல்லது அவர்கள் நிரப்பி எடுத்துக்கொண்ட பாத்திரங்களாகவே பேசுகிறார்கள்- செயல்படுகிறார்கள். அவர்களும் நம்மைப் போலவே தங்கள் பாத்திரத்தின் தனித்தன்மையை கொண்டாடக்கூடியவர்களாக இருக்கிறார்கள். தங்கள் பாத்திரமே ஆகச்சிறந்தது- உலகிற்கான கைவிளக்கு என நம்மைப் போலவே அவர்களும் சொல்கிறார்கள்.

ஒருவர் பொற்காலம் இருந்தது அங்கே போகலாம் என்றால், வேறு ஒரு பாத்திரம் அடையப்போகும் பொற்காலத்தைப் பேசும்.

பாத்திரங்கள் தங்களுக்குள் உரையாடலாம் என்றால், உன் பாத்திரத்துடன் பேசுவதற்கு என் பாத்திரம் இடம்கொடாது என நவீன தீண்டாமை குறுக்கிடும். பாத்திரங்கள் நிரம்புவதற்கும், ஒன்றையொன்று வீழ்த்துவதற்கும் ஏராள காலங்களை எடுத்துக்கொள்ளும்.

சிலநேரங்களில் பாத்திரங்கள் தங்களைத் தாங்களே துலக்கிக்கொள்ளவேண்டும் என்பதை உணரும். பல நேரங்களில் இல்லை நன்றாகவே இருக்கிறோம் என சமாளித்து நிற்கும். அந்த அந்த பாத்திரத்தை அவ்வப்போது துலக்கிக் கொள்ளக்கூடாதா என எவராலும் கண்டுகொள்ளப்படாத பழைய குரல் ஒன்று ஜீவனற்று பேசிக்கொண்டிருக்கும்.

வாழ்க்கையை நாம் தரிக்கும் பாத்திரம் வழி பேசிக்கொண்டே செல்கிறோம். உயர்வு தாழ்வு கற்பித்துக்கொண்டே நம்மை நாம் கொண்டாடிக்கொள்வதில் பெருமிதம் அடைகிறோம். எப்போதும் நம் பாத்திரம் கொண்டாடப்படவேண்டும் என்பதற்கான அசைவுகளை செய்துகொண்டேயிருப்போம்.

டிசம்பர் 2 2023

லூயி பிஷரின் லெனின்

லூயி பிஷர் என்றால் அவர் எழுதிய The Life of Mahatma Gandhi தான் இந்திய வாசகர்களுக்கு உடனடியாக நினைவிற்கு வரும். லூயி பிஷரின் காந்தி வாழ்க்கை வரலாறு மிகச் சிறப்பான ஆக்கம் என புகழ்பெற்றது. அப்புத்தகம் 1951ல் வந்தது.

லூயி பிஷர் ஏராள புத்தகங்களை எழுதியுள்ளார். காந்தி வாழ்க்கையை எழுதிய பிஷர் லெனின் வாழ்க்கை வரலாறையும் மிகப்பெரிய புத்தகமாக எழுதியுள்ளார். உயரமான 700 பக்கங்கள் கொண்ட ஆதார ஆய்வுடன் கூடிய சிறந்த புத்தகமது. பிஷர் எழுதி 1964 ல் வெளியான புத்தகம்.

லெனின் 54 ஆண்டுகளே இவ்வுலக வாழ்வில் ( 1870- 1924) இருந்தவர். 1917 அக்டோபர் புரட்சிக்குப் பின்னர் உலகம் அறிய உயர்ந்தார். மார்க்சியம் என்பதுடன் லெனினியம் என்பதும் இணைக்கப்படும் அளவிற்கு உலகின் பல்வேறு நாடுகளின் இளைஞர்களை அறிவுஜீவிகளை உழைப்போரை கம்யூனிஸ்ட் ஸ்தாபன முறைப்படுத்திக்கொள்ள அவர் பெரும் ஆதர்சன மனிதராக தலைவராக இருந்தார். போராடுகின்ற மனிதர்களின் காதுகள் அவருக்காக திறந்து இருந்தன. அவர் இப்படி சொல்லியுள்ளார் என்பது எந்த argument - debate லும் மார்க்சியர்களிடம் செல்லத்தக்கதானது.

இந்திய விடுதலைப் போர் காலத்தில் பலரிடத்தும், விடுதலைக்குப் பின்னர் இன்றுவரை இடதுசாரி எண்ணம் கொண்டவர்களிடத்தும் பெரும் செல்வாக்கு செலுத்தும் பெயர் லெனின் என்பது.

பிஷர் 50 அத்தியாயங்களில் லெனின் வாழ்க்கை, ருஷ்ய சோவியத் வரலாறு, இடது இயக்கங்கள்- முரண்கள், போல்ஷ்விக்குகளின் வெற்றி ஆட்சி - அவர்கள் எடுத்த முடிவுகள் துயர்கள் என பல்வேறு அம்சங்கள் குறித்து இதில் விவாதித்துள்ளார். லெனின் கிருப்ஸ்காயா வாழ்க்கையும் சேர்த்தே பேசப்பட்டுள்ளது. பிஷர் வரிகளில்

..childless but leaving many ideological heirs and millions of political offspring throughout the world. எவ்வளவு சத்திய வரிகள்.

லெனின் அவரது காலத்தின் குழந்தை- புரட்சியாளர் என்பதை சொல்லும் வரிகளாக

Lenin might have become a professor of economics, a successful lawyer or chess champion. Nothing in his ancestry, childhood or adolescence offers a clue to his subsequent career as revolutionary, dictator and founder of soviet state. He was a child of Russia turbulent, violent and the fruit of a tree with long roots in her varied soil.

பிஷர் வாசகரை சோர்வடையாமல் வசீகரித்து இழுத்துச் செல்லும் நடையை கையாண்டவர். லெனின் போன்ற கோட்பாட்டளர்களை விளக்குவதில் நல்ல தேர்ச்சி இருந்தால்தான் அது சாத்தியமாகும். இல்லையெனில் வாசகர் எதையும் உள் வாங்காமல் அந்த எழுத்துடன் connect ஆக மாட்டார். நச்சென பிஷர் பேசக்கூடிய இடங்கள் சுவையைக் கூட்டி வாசிப்பவரை ரம்மியமாக அழைத்துச் செல்லும்.

முடிந்தவரை ,hagiography என்ற வகையில் அமைத்துக்கொள்ளாமல் தகவல்களை தோண்டித் துருவி ஆதாரங்களின் அடிப்படையில் பிஷர் தன் text யை பின்னியுள்ளார்.

லெனின் அண்ணன் ஜார் கொலை வழக்கில் தூக்கு மேடைக்கு செல்லும்போது பிஷர் காட்சிப்படுத்திய லெனின் தாயாரின் நெஞ்சுரம் பிரம்மிக்கத்தக்கத்காக இருக்கும்.

லெனினுடன் பிறந்தவர்கள் அன்னா, அலெக்சாந்தர் ( சாஷா), ஓல்கா, டிமிட் ரி, மரியா. அப்பா இலியா நிகோலவிச் உலியனாவ். அம்மா மரியா அலெக்சாண்டிரவ்னா பிளாங். அவர்கள் குடும்பம் கொஞ்சம் வசதியான கல்வி பின்புலம் கொண்ட மத்தியதர வர்க்கம். வீட்டில் சிங்கர் தையல் மெஷின் உண்டு. பியானோ உண்டு. புத்தகங்கள் உண்டு. அண்ணன் சாஷா கல்லூரியில். லெனினை அவரது 9 வது வயதிற்கு மேல் தான் பள்ளிக்கூடம் சேர்த்தனர்- அங்கு ஜிம்னாசியம் என்பர். மார்க்ஸ் பள்ளியும் ஜிம்னாசியம் என்றே ஜெர்மனியில் சொல்லப்பட்டது. முதல் கிரேடு 5 க்கு 4.99 பெற்ற மாணவன் லெனின்.

அப்பா ஜனவரி 1886 ல் மறைகிறார். நிலைமைகள் மாறுகின்றன. சாஷா நரோத்னிக் இலக்கியங்கள், மார்க்சிய நூல்களை வாசிக்கலானார். புரட்சிகர இயக்கத் தொடர்பு வலுப்படுகிறது. லெனின் தான் ‘கடவுள் நம்பிக்கையற்றவர்’ என தன் 16 ஆம்

வயதில் வீட்டில் வெளியில் சொல்லத்துவங்குகிறார். சாஷா ஜெர்மன் மொழியில் மார்க்ஸ் எழுதிய கட்டுரையை ருஷ்ய மொழிபெயர்ப்பாக தருகிறார்.

நரோத்னிக் தோழர்கள் குண்டு வீசி இரண்டாம் ஜார் மன்னரை மார்ச் 1881ல் கொலை செய்கின்றனர். இவ்வழக்கில் சாஷா சம்பந்தம் உள்ளது என அவர் கைது செய்யப்பட்டு விசாரணை செல்கிறது. அக்கா அன்னா சம்பந்தமேயில்லாமல் கைது செய்யப்பட்டு பின்னர் விடுவிக்கப்படுகிறார். மூன்றாம் ஜாரிடம் அப்பீல் செய்து மரண தண்டனையை குறைக்கலாம் என நண்பர்கள் சொல்லினர். அம்மாவின் வேண்டுகோளை அண்ணன் சாஷா எற்கவில்லை. நாட்டிற்காக நமது குடும்பம் செய்த தியாகமாக இருக்கட்டும் எனச் சொல்லி சாஷா தனது 21 ஆம் வயதில் தூக்கு கயிற்றை எதிர்கொள்கிறார். இந்த தனிநபர் அழித்தொழிப்பு வன்முறை வழி வேண்டாம். அமைப்பு வழி ஆயுதப் போராட்டம் என்கிற வழியை பின்னர் லெனின் தேடலானார்.

பார்க்க வரும் அம்மாவிடம் சாஷா கேட்டதெல்லாம் கவிதை மற்றும் புத்தகங்கள்தான். அம்மாவும் மனதை அந்த நாளுக்காக தயார் படுத்திக்கொண்டார். இங்கு பிஷர் எழுதியிருப்பது.. வாசிக்கையில்மனம் உட்கார்ந்து போகும்..

She brought the books and kissed him good by. He was executed on may 8 ,1887. His mother accompanied him to the gallows and said “ Take courage Take courage” . He had just passed his 21st birthday.

தூக்கு மேடைவரை சென்று ‘தைரியமாக இரு தைரியமாக இரு’ என மகனை வழி அனுப்பிய அந்த தாயை உள்ள உறுதியை பிஷர் கண் முன் காட்டியிருப்பார்

பார்க்கலாம்..

**டிசம்பர்** 1, 2023

The leader who is going on adding his worshipful disciples will be made a deity, and no one can question the falsity of that God

Com Namari

**டிச** 1

ஜிகாத் என்கிற சொல் குறித்து தவறான புரிதலை போக்கும் முயற்சியில் எழுதப்பட்ட text தான் ஏ ஜி நூரணியின் நூலான 'இஸ்லாமும் ஜிகாத்தும்' .

முஸ்லிம் அல்லாதவர் மத்தியில் மட்டுமல்லாமல், முஸ்லீம்களின் மத்தியிலும் நிலவும் தவறான புரிதலை, பல்வேறு அறிஞர்களின் எழுத்துக்களின் வழியாக சரி செய்ய விழைந்துள்ளார் நூரணி.

ஜிகாத் என்றால் போர்- வன்முறை - மதத்தீவிரவாதம் என்ற புரிதல் தவறென்கிறார். அதற்கெல்லாம் ஹார்ப்- யுத்தம், சிராஸ்- சண்டை, மாரகா- போர், க்யுதல்- கொல்லுதல் போன்ற அரபு சொற்கள் இருக்கின்றன. ஜிகாத் என்றால் கடின முயற்சி எனப் பொருள். இஜ்திஹாத் என்பதற்கு 'மூளையை கசக்கிக்கொள்தல்' என்பது பொருள். வெறும் கத்தியால் மட்டுமல்ல, இதயம் நாக்கு, கைகளால் தன் பொறுப்பை நிறைவேற்றும் ஆன்மீகப் போராட்டம் என்கிற புரிதலையும் அறிஞர்கள் தருகின்றனர்.

'சூரா' , ஆக்ரமிப்பாளர்களை கடவுள் விரும்புவதில்லை- உங்கள் மீது தாக்குதல் தொடுப்பவர்களை எதிர்த்து போராடுங்கள் எனச் சொல்லித்தருகிறது என்கிறார் நூரணி. போரின் அடிப்படை தற்காப்புத் தத்துவமாக இருக்கட்டும் என குரான் குறித்த விரிவுரையாளர் முகமது ஆசாத் மேற்கோளை நூரணி காட்டுகிறார்.

தாய்லாந்து அறிஞர் காதர் முகைதீன் போன்றவர் விளக்கியுள்ள The Non Violent Cresent Eight Theses on Muslim Non violent Actions போன்றவற்றை பொருட்படுத்தி வாசிக்க நூரணி பரிந்துரைக்கிறார். அதில் இடம் பெற்றிருக்கும் ஒரு பத்தி

" அநீதிக்கு அடிபணியாமை, வலுவான கட்டுப்பாடு, சமூகப் பொறுப்புணர்வு, சிரமங்களைப் பகிர்ந்துகொள்வதில் ஆர்வம், விடாமுயற்சி, தியாக உணர்வு, முஸ்லிம் சமூகத்தின் ஒற்றுமையுடன் மனிதகுல ஒற்றுமை ஆகியவற்றை இஸ்லாம் போதிக்கும். இஸ்லாம் வன்முறையற்ற போராட்ட வழிக்கு சிறந்த களம். 'அமைதி ' கருணைகொண்ட கடவுளின் வாக்கு இது."

மத அடிப்படைவாதம் குறித்து நூரணி இவ்வாறு மதிப்பிடுகிறார்.

அது 20 ஆம் நூற்றாண்டின் பீடை. எந்த பழமை மதமும் இந்த பீடையிலிருந்து தப்பமுடியவில்லை. அதில் காரணகாரிய அறிவு தொழிற்படுவதில்லை. நம்பிக்கையிலிருந்து பரிவுணர்வு என்பதை அது பிரித்துவிடுகிறது. அது இறந்த காலத்தை கிண்டி கிளறி புதுப்பிக்கப் பார்க்கிறது. சிறுபான்மையினரிடம் பகைமை பாராட்டுகிறது. அறிவார்ந்த பார்வை தர்க்கரீதியானவற்றை அது எடுத்துக்கொள்ளாது. எதிர்த்தல், சகிப்பின்மை, அறிவு வறட்சி, நன்னெறி நாட்டமின்மை அதன் குணங்கள். பன்முகத்தன்மை, சுதந்திர பேச்சு, ஜனநாயகம் ஆகியவற்றைத் தள்ளி, வன்முறையை எடுத்த்துகொள்ளும். மத அடிப்படைவாதம் ஒரு நோய்.

கொமேனி போன்றவர் மதகுருமார் ஆட்சி- இறையியலாளர் காப்பாட்சி என்கிற theologians guardianship பேசினர். கடவுளின் ஜனநாயகம் Theo democracy என்கிற கருத்தை சொன்ன இஸ்லாமிய அறிஞர்கள் உண்டு. பல நூல்களை நூரணி இவ்வாக்கத்தில் அறிமுகப்படுத்துகிறார். அதில் சில

The failure of political Islam

Warriors of Prophet

The illusion of Triumph

Islam and the Non Muslim minorities

Human rights in Islam

Islam and its relevance to our Age

Ghalib Life and Letters

An Islamic response to Imperialism

A critical exposition of popular Jihad

Islam and the Challenge of Modern World

இக்பால் அவர்களின் சொற்பொழிவுகள் 1930 ல் The Reconstruction of Religious Thought in Islam என்பதில் அவரின் ஆறாவது சொற்பொழிவை நூரணி

வாசித்து பார்க்க பரிந்துரைக்கிறார். அதில் கடுமையான முயற்சி என்ற பொருளில் இஜ்திஹாத் பற்றி விளக்கமளிக்கிறாராம். ‘கடும் முயற்சியை மேற்கொள்வோர் வழிகாட்டிகளாவர்’ என திருக்குரான் வசனத்தை இக்பால் புரிந்துகொள்ளச் சொன்னாராம்.

நூரணியின் இந்த வரிகள் கவனிக்கத்தகுந்தவை

“ இஸ்லாம் தனிநபரின் பக்தியை அடிப்படையாகக் கொண்ட மதமன்று. கூட்டுத்தொழுகையே சிறந்ததாக அங்கு கருதப்படுகிறது. இஸ்லாம் பொருளாதார சமத்துவம், சமூக நீதி, தனிமனித சுதந்திரம், ஒடுக்கப்பட்டவர் விடுதலை ஆகியவற்றை உயரிய நோக்கங்களாக கொண்டுள்ளது. அது அரசாங்க அடிப்படைகளை பேசவில்லை. சமூக நன்னடத்தையை பேசுகிறது. காலத்திற்கேற்ப இஸ்லாமை புரிந்துகொள்ளவேண்டும்”